ஞானி புருஷ் தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# கோபம்

கோபம் என்றால் எரியும் நெருப்பு, முதலில் ஒருவர் தன்னை எரித்துக் கொண்டு, பிறகு மற்றவர்களையும் எரிக்கிறார்.

Tamil




ஞானி புருஷ் தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# கோபம்

நிரூபென் அவர்களால் தொகுக்கப்பட்டது மற்றும்
பின்பற்றுபவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.




# த்ரிமந்திரம்





நமோ வீதராகாய
நமோ அரிஹந்தானம்
நமோ சித்தானம்
நமோ ஆயரியானம்
நமோ உவஜ்ஜாயானம்
நமோ லோயே சவ்வ சாஹுனம்
ஏசோ பஞ்ச நமுக்காரோ
சவ்வ பாவப்பனாசனோ
மங்களானம் ச்ச சவ்வேசிம்
பதமம் ஹவயி மங்களம்
ஓம் நமோ பகவதே வாசுதேவாய
ஓம் நம சிவாய
ஜெய் சச்சிதானந்தம்





## தமிழில் தாதா பகவானின் புத்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆத்ம அனுபவம் | 5. | மனிதநேயத்தின் நடைமுறை |
| 2. | அட்ஜெஸ்ட் எவ்ரிவேர் | 6. | கோபம் |
| 3. | மோதல்களை தவிர்க்கவும் | 7. | கவலைகள் |
| 4. | நான் யார்? | 8. | மரணம் |

❖ விரைவில் மேலும் பல புத்தகங்கள் தமிழில் கிடைக்கும்.

## Books of Dada Bhagwan in English

| | | | |
|---|---|---|---|
| 1. | Adjust Everywhere | 19. | Money |
| 2. | Ahimsa: Non-Violence | 20. | Noble Use of Money |
| 3. | Anger | 21. | Pratikraman |
| 4. | Aptavani-1 | 22. | Pure Love |
| 5. | Aptavani-2 | 23. | Right Understanding to Help Others |
| 6. | Aptavani-4 | | |
| 7. | Aptavani-5 | 24. | Science of Karma |
| 8. | Aptavani-6 | 25. | Science of Speech |
| 9. | Aptavani-8 | 26. | Shree Simandhar Swami : The Current Living Tirthankar |
| 10. | Aptavani-9 | | |
| 11. | Autobiography of Gnani Purush A.M Patel | 27. | Simple & Effective Science of Self-Realization |
| 12. | Avoid Clashes | 28. | The Essence Of All Religion |
| 13. | Brahmacharya: Celibacy Attained with Understanding | 29. | The Fault Is Of The Sufferer |
| | | 30. | The Guru and The Disciple |
| 14. | Death: Before, During & After… | 31. | The Hidden Meaning Of |
| | | 32. | The Practice Of Humanity |
| 15. | Flawless Vision | 33. | Trimantra |
| 16. | Generation Gap | 34. | Whatever Happened is Justice |
| 17. | Harmony in Marriage | 35. | Who Am I? |
| 18. | Life Without Conflict | 36. | Worries |

❖ Dada Bhagwan books are available in different languages: Gujarati, Hindi, English, Marathi, Telugu, Kannada, Oriya, Malayalam, Bengali, Punjabi, Assamese, Tamil, German, Spanish, Russian, etc.

❖ 'Dadavani' Magazine is published every month in three languages: Gujarati, Hindi & English.

## தாதா பகவான் என்பவர் யார்?

ஜூன் 1958, சுமார் மாலை ஆறு மணிக்கு, சூரத் ரயில் நிலையத்தில், சலசலப்புக்கு மத்தியில் ஒரு பெஞ்சில் அம்பாலால் முல்ஜூபாய் பட்டேல் அமர்ந்திருந்தார். அப்போது தாதா பகவான், அம்பாலால் அவர்களின் புனிதமான உடலுக்குள் முழுமையாக வெளிபட்டார். ஆன்மீகத்தின் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்வை இயற்கை வெளிப்படுத்தியது! ஒரு மணி நேரத்திற்குள் பிரபஞ்சத்தின் தரிசனம் அவருக்கு வெளிபடுத்தப்பட்டது! நாம் யார்? கடவுள் என்பவர் யார்? உலகை இயக்குபவர் யார்? கர்மா என்றால் என்ன? மோட்சம் என்றால் என்ன? போன்ற அனைத்து ஆன்மீக கேள்விகளுக்கு முழுமையான தெளிவு கிடைத்தது.

அன்று மாலையில் அவர் அடைந்த ஞானத்தை, தனது பிரத்தியேக விஞ்ஞான ஆய்வு முறை *(ஞானவிதி)* மூலம் மற்றவர்களுக்கு இரண்டே மணி நேரத்தில் ஞானம் வழங்கினார். இதை அக்ரம் பாதை என்று குறிப்பிடப்படுகிறது. *க்ரம்* என்றால் ஒன்றின் பின் ஒன்றாக மேலே ஏறுவது அதாவது படிப்படியாக ஏறுவது, ஆனால் *அக்ரம்* என்றால் படி இல்லாத எளிதான, லிப்ட் பாதை.

தாதா பகவான் யார் என்பதை அவர் மற்றவர்களுக்கு விளக்கி கூறுவது என்னவென்றால், உங்கள் முன்னால் தெரிபவர் தாதா பகவான் அல்ல, நான் *ஞானி புருஷ்*, என்னுள் “பதினான்கு உலகங்களுக்கும் அதிபதியான தாதா பகவான் வெளிப்பட்டு இருக்கிறார்”. அவர் உங்களின் உள்ளும் உள்ளார். அனைவரின் உள்ளும் உள்ளார். ஆனால் அவர் உங்களினுள் வெளிப்படாமல் இருக்கிறார். இங்கு (ஏ.எம்.பட்டேல் அவர்களின் உள்) முழுமையாக வெளிப்பட்டு இருக்கிறார். நான் இறைவன் *(பகவான்)* அல்ல. என்னுள் வெளிபட்டிருக்கும் தாதா பகவான் அவர்களை நானும் தலை வணங்குகிறேன்.



## ஆத்ம ஞானம் அடைவதற்கான தற்போதைய தொடர்பு

1958 ஆம் ஆண்டு ஆத்ம அனுபவம் பெற்ற பிறகு, மதிப்பிற்குரிய தாதாஸ்ரீ, ஆன்மீகத்தை தேடுபவர்களுக்கு, ஆன்மீக சொற்பொழிவுகள் மற்றும் ஆத்ம ஞானம் வழங்குவதற்காக தேசிய மற்றும் சர்வ தேச அளவில் பயணம் செய்தார்.

தாதாஸ்ரீ தான் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, டாக்டர் பூஜ்ய நிரூபென் அமீன் அவர்களுக்கு, ஆத்ம ஞானம் மற்றவர்களுக்கு வழங்குவதற்கான ஆன்மீக சக்தியை அளித்தார். தாதாஸ்ரீ அவர்களின் உயிர் பிரிந்த பிறகு, பூஜ்ய நிருமா ஒரு செயல் புரியும் கருவியாக, தாதாஸ்ரீ அவர்களின் ஆன்மீக சொற்பொழிவுகள் மற்றும் ஆத்ம ஞானத்தை, ஆன்மீக நாட்டமுடையவர்களுக்கு வழங்கினார்.

தாதாஸ்ரீ, பூஜ்ய தீபக்பாய் தேசாய் அவர்களுக்கும் ஆன்மீக சொற்பொழிவுகள் நடத்துவதற்கான ஆன்மீக சக்தியை அளித்தார். இப்போது பூஜ்ய தீபக்பாய், பூஜ்ய நிருமா அவர்களின் ஆசியினால், ஒரு செயல் புரியும் கருவியாக தேசம் மற்றும் சர்வதேச நாடுகளுக்கு சென்று ஆத்ம ஞானம் வழங்கி வருகிறார்.

ஆத்ம ஞானத்தை அடைந்த பிறகு, ஆயிரக்கணக்கான ஆன்மீக நாட்டமுடையவர்கள் தங்கள் உலகப் பொறுப்புகள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொண்டே, உலகியல் பந்தத்தில் இருந்து விடுபட்டு ஆத்ம ஞான நிலையில் நிலைபெறுகின்றார்.



# இந்த மொழிபெயர்ப்பு பற்றிய குறிப்பு

அம்பாலால் எம்.பட்டேல், பொதுவாக தாதாஶ்ரீ அல்லது தாதா என்று அழைக்கப்படும் ஞானி புருஷ் அவர்கள், ஆன்மீக ஆர்வலர்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் வடிவில் ஆன்மீக சொற்பொழிவுகளை வழங்கினார்.

இந்த சொற்பொழிவுகள் பூஜ்ய டாக்டர் நிரூபென் அமீன் அவர்களால் பதிவு செய்யப்பட்டு, குஜராத்தி மொழியில் புத்தகங்களாக தொகுக்கப்பட்டது, தாதாஶ்ரீ தனது *சத்சங்கம்* மற்றும் ஆத்ம அனுபவ விஞ்ஞானத்தை பற்றிய ஞானத்தை வார்த்தைக்கு வார்த்தை மற்ற மொழிகளில் மொழிபெயர்ப்பது சாத்தியம் இல்லை. ஏனெனில் சில அர்த்தங்கள் அதில் இழக்க நேரிடும் என்று கூறியுள்ளார். எனவே *அக்ரம் விஞ்ஞானம்* மூலம் ஆத்ம அனுபவத்தை துல்லியமாக புரிந்து கொள்வதற்காக குஜராத்தி கற்க வேண்டியதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். இருப்பினும், தாதாஶ்ரீ தனது சொற்பொழிவை பிற மொழிகளில் மொழிபெயர்க்க தனது ஆசீர்வாதம் வழங்கினார். ஏனென்றால் ஆன்மீகத்தை பற்றி கண்டறிய விரும்புபவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு பயனடைந்து, பின்னர் தங்கள் சொந்த முயற்ச்சியின் மூலம் முன்னேறி விடுவார்கள்.

இந்த புத்தகம் நேரடி மொழிபெயர்ப்பு அல்ல அவரது மூல முதலான சொற்பொழிவு சாரத்தை பாதுகாக்க அதிக கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

ஆன்மீக சொற்பொழிவுகள் குஜராத்தி மொழியில் இருந்து தொடர்ந்து மொழிபெயர்கப்பட்டு வருகின்றன. சில குஜராத்தி வார்த்தைகளின் அர்த்தத்தை வெளிப்படுத்துவதற்கு பல

மொழிபெயர்க்கப்பட்ட வார்த்தைகள் அல்லது வாக்கியங்கள் தேவைபடுகின்றன. எனவே, குஜராத்தி வார்த்தைகளை சிறந்த புரிதலுக்காக மொழி பெயர்க்கப்பட்ட உரைக்குள் தக்கவைக்கப்பட்டுள்ளன. குஜராத்தி வார்த்தையை முதன்முறையாக பயன்படுத்தப்பட்ட இடத்தை அதை சாய்வாக எழுதி அதை தொடர்ந்து அடைப்புக் குறிக்குள் அதன் அர்த்தத்தை விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. பின் வரும் உரையில் குஜராத்தி வார்த்தை மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டு மடங்கு நன்மைகளை வழங்குகிறது. முதலாவதாக, மொழிபெயர்ப்பின் எளிமை வாசிப்பதற்கு, மற்றும் இரண்டாவதாக இந்த ஆன்மீக விஞ்ஞானத்தை நன்றாக புரிந்துகொள்வதற்கு முக்கியமான குஜராத்தி வார்த்தைகள், வாசகருக்கு பரிச்சயமாகிறது.

சதுர அடைப்பு குறிக்குள் இருக்கும் உள்ளடக்கம், விஷயத்தின் கூடுதல் தெளிவை அளிக்கிறது. இது குஜராத்தி உள்ளடக்கத்தில் இல்லை.

தாதாஸ்ரீ அவர்களின் ஞான சாரத்தை உலகிற்கு முன் வைக்கும் பணிவான முயற்சி இது. இந்த மொழிபெயர்ப்பை படிக்கும்போது ஏதேனும் முரண்பாடு இருந்தால், அது மொழிபெயர்பாளர்களின் தவறு மட்டுமே, விஷயத்தைப் பற்றிய தெளிவான புரிதலை வாழும் ஞானியிடம் தெளிவுபடுத்தி கொள்ளவேண்டும்.



# தலையங்கம்

கோபம் என்பது பலவீனம், எனினும் மக்கள் அதை பலம் என்று எண்ணிக் கொள்கிறார்கள். கோபப்படுபவரை ஒப்பீடுகையில், கோபப்படாதவர் வலுவான மற்றும் தூய்மையான வியக்கத்தக்க அமைதியான தேஜஸ் கொண்டிருகிறார்!

பொதுவான பேச்சு என்னவென்றால், நமக்கு ஏற்றார் போல் செயல்கள் நடைப்பெறாதபோது, அல்லது நாம் சொல்வதை மற்றவர்கள் புரிந்து கொள்ளவில்லை என்றால், அல்லது கருத்து வேறுபாடு ஏற்பட்டால், நமக்கு கோபம் ஏற்படுகிறது. பல சமயங்களில், நாம் சரியாக இருக்கிறோம், ஆனாலும் மற்றவர் நம்மை தவறு என்று குற்றம் சாட்டினால், அப்போது நமக்கு கோபம் ஏற்படுகிறது. இருப்பினும், நாம் சரியாக இருக்கிறோம் என்பது நம் கண்ணோட்டத்தின்படி மட்டுமே, அல்லவா? மற்ற நபரின் கண்ணோட்டத்தின்படி, உண்மையில் அவர் தான் சரி என்று கருதிக்கொள்வார், அல்லவா? பல சமயங்களில், நமக்கு நுண்ணறிவு இருப்பது இல்லை, தொலைநோக்கு பார்வை இருப்பது இல்லை, நாம் என்ன செய்ய வேண்டும் என்று தெரியாமல் போவதால், நமக்கு கோபம் ஏற்படுகிறது.

நம்மை அவமானப்படுத்தும்போது, நமக்கு கோபம் ஏற்படுகிறது, நமக்கு நஷ்டம் ஏற்படும்போது நமக்கு கோபம் ஏற்படுகிறது. இப்படி, நமது பெருமை அல்லது பேராசையைப் பாதுகாப்பதற்காக கோபம் எழுகிறது. அச்சமயத்தில், நம்முள் இருக்கும் பலவீனங்களான பெருமை மற்றும் பேராசையில் இருந்து விடுபடுவதற்கான விழிப்புணர்வு அவசியம் தேவை. வீட்டு உதவியாளர் கோப்பையையும் சாஸரையும் உடைத்தால் கோபம் வரும், ஆனால் உங்கள் மருமகன் உடைத்தால் என்ன செய்வீர்கள்? அந்த சூழ்நிலையில் கோபம் எப்படி கட்டுக்குள் இருக்கிறது என்று கவனியுங்கள்! எனவே, அது ஒருவரின் புரிதலை மட்டுமே சார்ந்தது, அல்லவா?

யாராவது நமக்கு தீங்கு ஏற்ப்படுத்தினால் அல்லது நம்மை அவமானப்படுத்தினால், அது உண்மையில் நம்முடைய கர்மாவின்

விளைவு. மற்ற நபர் அதற்கு கருவியானவர் மட்டுமே. அப்படிப்பட்ட புரிதல் ஏற்பட்டால் தான், கோபம் விலகும்.

கோபம் எங்கெல்லாம், எப்பொழுதெல்லாம் எழுந்தாலும், அதை மனதில் குறித்து வைத்துக் கொண்டு, அதற்கான விழிப்புணர்வைப் பேண வேண்டும். உங்கள் கோபத்தால் யாரையாவது புண்படுத்தியிருந்தால், அதற்காக நீங்கள் *ப்ரத்திக்ரமன்* (தவறை ஒப்புக் கொண்டு, அதற்காக மன்னிப்பு கேட்டு, மீண்டும் அந்த தவறை செய்யாமல் இருக்க உள்ளார்ந்த உறுதிமொழி) செய்ய வேண்டும்; நீங்கள் மனம் வருந்தி, தவறை மீண்டும் செய்யக்கூடாது என்று உறுதியான தீர்மானம் செய்ய வேண்டும். ஏனென்றால், நீங்கள் யாரிடம் கோபப்படுகிறீர்களோ, அவர்கள் புண்படுத்தப்படுவார்கள், மேலும் அவர்கள் உங்களுடன் பழி உணர்ச்சியை பிணைத்துக்கொள்வார்கள். அதனால் நீங்கள் அடுத்த பிறவியில் அந்த மனிதரை எதிர்கொள்வீர்கள்!

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளிடம் கோபப்படும்போதும், குரு தங்கள் சீடர்களிடம் கோபப்படும்போதும், அதற்கு புண்ணிய கர்மா பிணைக்கப்படுகிறது. ஏனென்றால், கோபத்தின் பின்னால் இருக்கும் நோக்கம் ஒரு நபரின் நன்மைக்காக, அவர்களை மேம்படுத்துவதற்கானது. ஒருவருடைய சுயநலத்திற்காக கோபப்பட்டால், அவர்கள் தீய கர்மாவை பிணைக்கிறார்கள்! முற்றிலும் விடுப்பட்ட பகவான்களின் *(விதராக் பகவான்)* புரிதலில் உள்ள துல்லியத்தைப் பாருங்கள்!

மிகவும் தொந்தரவான, வெளிப்படையான பலவீனம், கோபம் பற்றிய அனைத்து விவரங்களும் தொகுக்கப்பட்டு இந்தப் புத்தகத்தில் வெளியிடப்பட்டுள்ளன. ஒரே பிரார்த்தனை என்னவென்றால், வாசிக்கும் வாசகர் கோபத்திலிருந்து விடுபட இந்த புத்தகம் மிகவும் உதவியாக இருக்க வேண்டும்.

**- டாக்டர். நிருபென் அமீன்**

# கோபம்

## ‘என்னுடைய தவறு’ என்பதை யார் ஏற்றுக்கொள்வார்கள்?

**கேள்வி கேட்பவர்:** நான் சரியாக இருந்தும், யாரோ ஒருவர் என் மீது தவறு என்று கூறினால், அவர் மீது எனக்கு கோபம் வருகிறது. கோபம் அவ்வளவு சீக்கிரம் வராமல் இருக்க நான் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ:** ஆம், ஆனால் அது நீங்கள் சரியாக இருக்கும் போது மட்டுமே, இல்லையா? நீங்கள் உண்மையில் சரியாக உள்ளீர்களா? நீங்கள் சொல்வது சரி தான் என்பதை உணருகிறீர்களா?

**கேள்வி கேட்பவர்:** நான் சரி என்று என் ஆத்மா கூறுகிறது.

**தாதாஸ்ரீ:** இந்த விஷயத்தில், நீங்களே நீதிபதி, நீங்களே வழக்கறிஞர், நீங்களே பிரதிவாதி. எனவே நிச்சயமாக நீங்கள் சரிதான், இல்லையா? அப்படியானால் உங்களை நீங்கள் ஒருபோதும் தவறு என்று நிரூபிக்கமாட்டீர்கள், அல்லவா? ‘நான் தான் சரி’ என்று மற்றவரும் எண்ணுகிறார். அது உங்களுக்கு புரிகிறதா?

## இவை அனைத்தும் பலவீனங்கள்

**கேள்வி கேட்பவர்**: ஆனால் நான் கேட்க விரும்புவது என்னவென்றால், அநீதிக்கு எதிராகக் கிளர்ந்தெழுவது நல்லதல்லவா? ஒரு குறிப்பிட்ட விஷயத்தில், அநீதி

நடந்திருப்பதை நாம் தெளிவாக காணும்போது, நாம் கோபப்படுவது நியாயமல்லவா?

**தாதாஸ்ரீ**: உண்மை என்னவென்றால், இந்த கோபம் மற்றும் கிளர்ச்சி அனைத்தும் பலவீனங்கள் மட்டுமே. உலகம் முழுவதும் இத்தகைய பலவீனங்களை கொண்டுள்ளது. உங்களை யாராவது திட்டினால், நீங்கள் கோபமடைவீர்கள்; அப்படித்தானே?

**கேள்வி கேட்பவர்**: ஆம், நான் கோபமடைகிறேன்.

**தாதாஸ்ரீ**: அது ஒரு பலவீனமா அல்லது பலமா?

**கேள்வி கேட்பவர்**: ஆனால் சில சூழ்நிலைகளில் கோபம் இருக்க வேண்டும், அல்லவா!

**தாதாஸ்ரீ**: இல்லை, இல்லை. கோபம் என்பதே ஒரு பலவீனம். சில சூழ்நிலைகளில் உண்மையில் கோபம் இருக்க வேண்டும் என்று சொல்வது உலக நடைமுறை. ஒருவரால் கோபத்திலிருந்து விடுபட முடியாததால் தான், கோபம் இருக்க வேண்டும் என்கிறார்!

## யாரோருவரின் மனது பாதிக்கப்படாமல் இருக்கிறதோ அவர்தான் பலமுள்ளவர்

**கேள்வி கேட்பவர்**: அப்படியானால், யாராவது என்னை அவமானப்படுத்தும்போது நான் அமைதியாக இருந்தால், அது பலவீனமாக கருதப்படாதா?

**தாதாஸ்ரீ**: இல்லை. உண்மையில், ஒரு அவமானத்தை சகித்துக்கொள்வது பெரிய பலமாக கருதப்படுகிறது! இப்போது யாரேனும் என் மீது குற்றம் சாட்டினால், அது என்னை பாதிக்காது.

அந்த நபரின் செயலால் என் மனதும் அந்த நபரைப்பற்றி தவறாக எண்ணாது. அதுவே பலம்! அப்படியிருக்க, இந்த மக்கள் அனைவரும் சண்டையிட்டுக்கொண்டே இருக்கிறார்கள், ஒவ்வொரு உயிரினமும் சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறது, அவை அனைத்தும் பலவீனமாக கருதப்படுகிறது. எனவே, ஒரு அவமானத்தை அமைதியாக பொறுத்துக் கொள்வதே மிகப்பெரிய பலம். அப்படிப்பட்ட அவமானத்தை ஒரே ஒருமுறை ஏற்றுகொள்ளும்போது நீங்கள், ஒரு படி மேலே செல்கிறீர்கள், பிறகு நூறு படிகள் மேலே செல்லும் ஆற்றல் எழுகிறது. உங்களுக்கு புரிகிறதா? எதிர்கொள்ளும் நபர் வலிமையானவராக இருந்தால், ஒவ்வொரு உயிரினமும் அவருக்கு முன்னால் பலவீனமாகிறது; அது ஒருவரின் இயற்கையான குணம். இருப்பினும், ஒரு பலவீனமான நபர் உங்கைளத் தூண்டினாலும், நீங்கள் அவரை எதுவும் செய்யவில்லை என்றால், அது பலமாக கருதப்படுகிறது.

உண்மையில், பலவீனமானவர்கள் பாதுகாக்கப்பட வேண்டும் மற்றும் வலிமையானவர்களை சமாளிக்க வேண்டும். இருப்பினும், தற்போதைய காலச்சூழற்சியில் அத்தகையவர்கள் இல்லை! இந்த காலத்தில், மக்கள் பலவீனமானவர்களை துன்பப்படுத்துகிறார்கள், வலிமையானவர்களை கண்டு ஓடிவிடுகிறார்கள். வெகு சிலரே பலவீனமானவர்களை பாதுகாத்து, பலமானவர்களை எதிர்த்து நிற்கிறார்கள். அத்தகையவர்களை, போர்வீரர் வர்க்கத்தின் பண்புகளை துன்புறுத்துகிறது. வீட்டில் கணவன் என்பவர் மனைவி மீது ஆதிக்கம் செலுத்துகிறார். மாடு ஒன்றை கட்டிவைத்து பிறகு அதை அடித்தால் அது எங்கே போகும்? நீங்கள் அந்த மாட்டை அவிழ்த்துவிட்டபின் அடித்தால் என்ன ஆகும்? மனைவியானவர் அந்த மாட்டை போல் ஓடிப்போவார் அல்லது சண்டையிடுவார்.

வலிமை இருந்தும், பிறரை துன்புறுத்தாமல், தன் எதிரியை கூடத் துன்புறுத்தாதவன், வலிமையானவனாக கருதப்படுவான். இப்பொழுதெல்லாம் யாரோ ஒருவர் உங்கள் மீது கோபித்துக் கொள்கிறார், அதற்கு நீங்களும் அவர் மீது கோபப்பட்டால், அது கோழைத்தனம் என்று கருதப்படாதா? அதனால் நான் சொல்வது என்னவென்றால், கோபம்-பெருமை-கபடம்-பேராசை என்பவை பலவீனங்கள். பலம் இருப்பவருக்கு கோபம் வரவேண்டிய அவசியம் என்ன? எனினும் ஒருவர் தனது கோபத்தினால் உண்டாகிற 'வெப்பம்' மூலம் மற்றவரை கட்டுக்குள் வைப்பதற்கு முயற்சிக்கிறார். இருப்பினும், கோபம் இல்லாதவனுக்கு வேறு ஏதாவது இருக்க வேண்டும், அல்லவா? அவனது நடத்தையால் விலங்குகள்கூட அடிபணிந்துவிடுகிறது, அந்த நடத்தையை *(ஷீல்)* என குறிப்பிடப்படுகிறது. புலிகள், சிங்கங்கள், எதிரிகள் அனைவரும், மற்றும் அனைத்து படைகளும் அடிபணிகிறது!

## ஒரு கோபமான நபர் உண்மையில் பலவீனமானவர்

**கேள்வி கேட்பவர்**: ஆனால் தாதா, நம் முன் யாராவது கோபப்பட்டால் நாம் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ**: அவர்கள் நிச்சயமாக கோபப்படுவார்கள்! அது அவர்களின் கட்டுப்பாட்டில் உள்ளதா? அவர்களுள் இருக்கும் உறுப்புக்கள் அவர்களின் கட்டுப்பாட்டில் இல்லை! இந்த உறுப்புக்கள் ஏதோ ஒரு வகையில் வேலை செய்து கொண்டே இருக்கிறது. அது அவர்களின் கட்டுப்பாட்டில் இருந்தால், உறுப்புகளை ஆத்திரம் அடைய விடமாட்டார்கள்! சிறிதளவு ஆத்திரம் அடைந்தாலும் அது கழுதையாக மாறுவதற்குச் சமம்; ஒருவன் மனித உருவத்தில் கழுதையாகிறான்! ஆனால் அப்படிப்பட்ட செயலை யாரும்

செய்யமாட்டார்கள், அல்லவா! அது ஒருவர் கையில் இல்லாத போது என்ன செய்ய முடியும்?

உண்மையிலேயே, இந்த உலகில் எந்த சூழ்நிலையிலும் ஆத்திரம் (கோபம்) அடைய வேண்டிய அவசியம் இல்லை. “இந்தப் பையன் எனக்கு கீழ்ப்படியவில்லை” என்று யாராவது சொன்னாலும், அமைதியாக இருந்து அந்த சூழ்நிலையை சமாளிக்க வேண்டும். உண்மையில் நீங்கள் பலவீனமாக இருப்பதால்தான் நீங்கள் ஆத்திரம் அடைகிறீர்கள். மேலும் ஆத்திரம் அடைவது என்பது ஒரு மிகப்பெரிய பலவீனமாக கருதப்படுகிறது. எனவே, ஒருவனுக்கு எந்த அளவுக்கு பலவீனம் இருக்கிறதோ, அந்த அளவுக்கு அவன் ஆத்திரம் அடைகிறான்! எனவே, ஆத்திரம் அடையும் நபருக்காக நீங்கள் பரிதாபப்பட வேண்டும். ‘இந்த விஷயத்தில் பரிதாபத்திற்குறிய மனிதன் தன்னை கட்டுபடுத்த முடிவதில்லை,’ தன் இயல்பைக்கூடக் கட்டுப்படுத்தாதவனை பார்த்து பரிதாபப்பட வேண்டும்.

ஆத்திரம் அடைவது என்றால் என்ன? நீங்கள் முதலில் உங்களுக்கு தீ வைத்துக் கொண்டு, பிறகு மற்றவரை எரியச்செய்வது. ஒருவர் தீக்குச்சியை கொளுத்தியதும், அவர் தீப்பிடித்துக்கொண்டு, பிறகு மற்றவரை எரிக்கிறார். எனவே ஆத்திரம் அடைவது ஒருவரின் சுய கட்டுப்பாட்டில் இருந்தால், யாரும் ஆத்திரம் அடைய மாட்டார்கள், அல்லவா! உள் எரிச்சலை யார் விரும்புகிறார்கள்? “உலக வாழ்வில் சில சமயங்களில் கோபப்பட வேண்டியது அவசியம்” என்று யாராவது சொன்னால், அப்போது நான், “இல்லை, நீங்கள் அங்கு கோபப்படுவதற்கு அப்படியொரு காரணத்தை சொல்லாதீர்கள்” என்று பதில் அளிப்பேன். கோபம் ஒரு பலவீனம்; அதனால்தான் அது எழுகிறது. கடவுள் அதனால்தான் அதை பலவீனம் என்று குறிப்பிட்டுள்ளார். யாரை ஆத்ம

அனுபவம் பெற்றவர் *(புருஷ்)* என்று குறிப்பிடப்படுகிறது? கோபம்-பெருமை-கபடம்-பேராசை என்ற பலவீனம் இல்லாதவர்; இறைவன் அத்தகைய நபரை *புருஷ்* என குறிப்பிடுகிறார். எனவே, நீங்கள் இங்கு காணும் இந்த மனிதர்களையும் பலவீனமானவர்கள் என்று குறிப்பிடப்படுகிறார்கள், ஆனால் அவர்கள் அதற்கு வெட்கப்படுவதில்லை. அந்த வகையில் அவர்கள் நல்லவர்கள். இல்லையென்றால் நாம் அவர்களை 'பலவீனமானவர்கள்' என்று சொன்னால் அவர்கள் வெட்கப்படுவார்கள், அல்லவா? ஆனால், அவர்களுக்கு அத்தகைய விழிப்புணர்வு இல்லை. அவர்களுக்கு எவ்வளவு விழிப்புணர்வு இருக்கிறது? ஒருவேளை அவர்களுக்கு குளிப்பதற்கு தண்ணீர் கொடுத்தால், அவர்கள் குளிப்பார்கள். உண்ணுதல், குளித்தல், உறங்குதல்; அவை அனைத்திலும் விழிப்புணர்வு அவர்களுக்கு இருக்கிறது, ஆனால் மற்றவைகளில் அவர்களுக்கு விழிப்புணர்வு இல்லை. மனிதகுலத்தின் சிறப்பு விழிப்புணர்வாகக் கருதப்படுவது என்னவென்றால், நல்ல மனிதர் என்பவர் யார் என்றால்; நல்ல மனிதத்தன்மை கண்டுபிடிக்கும் விழிப்புணர்வு மக்களுக்கு இல்லை.

கோபம்-பெருமை-கபடம்-பேராசை என்பது வெளிப்படையான பலவீனம். மேலும் அதிகக் கோபப்படும்போது கை கால்கள் நடுங்குவதை நீங்கள் கவனித்ததில்லையா?

**கேள்வி கேட்பவர்**: உடல் கூட, வேண்டாம்! நீங்கள் கோபப்படக்கூடாது, என்று சொல்கிறது.

**தாதாஸ்ரீ**: ஆம், உடல் கூட வேண்டாம், இது நமக்குப் பொருந்தாது என்று சொல்கிறது. எனவே கோபம் ஒரு பலவீனமாக கருதப்படுகிறது! அதனால் நீங்கள் கோபப்படக்கூடாது!

## பலவீனம் இல்லாதவரின் பண்பியல்பு மற்றவர்களிடம் தனிச்சிறப்பை பெறுகிறது

**கேள்வி கேட்பவர்**: யாரோ ஒருவர் ஒரு குழந்தையை மோசமாக அடித்துக்கொண்டு இருகிறார்கள், அந்த நேரத்தில் நாம் அந்த இடத்தை கடந்து செல்லும்போது, நாம் அவரை சமாதானம் செய்ய முயற்சித்தும், அவர் நமக்குக் கீழ்ப்படியவில்லை என்றால், கடைசி முயற்சியாக நாம் அவரைத் திட்டி, கோபமடைந்து அவரை தடுக்க வேண்டாமா?

**தாதாஸ்ரீ**: நீங்கள் கோபப்பட்டாலும் அவர் [குழந்தையை] அடிப்பதைத் நிறுத்தமாட்டார். அவர் உங்களையும் அடித்துவிடுவார்! எனினும், நீங்கள் அவரிடம் சமாதானமாக பேசிய பிறகு அவரிடம் கேளுங்கள், ஏன் குழந்தையிடம் கோபப்படுகிறீர்கள்? என்று. ஆனால், அதற்கு மாறாக நீங்கள் அவர் மீது கோபப்பட்டால், அதுதான் உங்களின் பலவீனம்!

**கேள்வி கேட்பவர்**: அப்படியானால் நாம் குழந்தையை அடிக்க அவரை அனுமதிக்க வேண்டுமா?

**தாதாஸ்ரீ**: இல்லை, நீங்கள் அங்கு சென்று, "நீங்கள் நல்ல மனிதர், ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? இந்தக் குழந்தை உங்களுடையதை எதையும் அழித்துவிடாது?" இப்படி பேசி அவருக்குப் புரிய வைக்கலாம். நீங்கள் அவர் மீது கோபப்பட்டீர்கள் என்றால், இந்த கோபம் உங்கள் பலவீனம். முதலும் முக்கியமானதும் எதுவென்றால், இந்த பலவீனம் உங்களுக்குள் இருக்கக்கூடாது. எந்த பலவீனமும் இல்லாத ஒருவர் தனது பண்பியல்பினால் தான் அவர் மற்றவரின் மனதில் நிலைகொள்கிறார்! அப்படிப்பட்டவர்

சாதாரணமாக எதையாவது சொன்னாலும் எல்லோரும் அவருக்கு கீழ்படிவார்கள்.

**கேள்வி கேட்பவர்**: ஒருவேளை அவர்கள் கீழ்ப்படியாமலும் கூட இருக்கலாம்.

**தாதாஸ்ரீ**: அவர்கள் ஏன் உங்களுக்கு கீழ்ப்படிவதில்லை? உங்கள் பண்பியல்பு அவர்களின் மனதை கவரவில்லை. அதனால்தான் ஒருவருக்கு பலவீனம் இருக்கக்கூடாது; ஒருவர் நீதிக்குரியவராக மற்றும் தூய நடத்தை கொண்டவராக இருக்க வேண்டும். ஒருவர் பண்பியல்பு கொண்டவராக இருக்க வேண்டும்! அப்படிப்பட்டவரை கண்டால் லட்சக்கணக்கான குண்டர்கள் ஓடிவிடுவார்கள்! அதேசமயம் எரிச்சலூட்டும் நபரைக்கண்டு யாரும் ஓட மாட்டார்கள்; மாறாக, அவர் தாக்கப்படுவார்! பலவீனமானவரை உலகம் தாக்கும்!

எனவே, ஒருவர் பண்பியல்பு கொண்டவராக இருக்க வேண்டும். ஒரு நபர் எப்போது பண்பியல்பை பெறுகிறார்? விஞ்ஞானத்தை புரிந்து கொள்ளும் போது பண்பியல்பு உருவாகிறது. இவ்வுலகம் மறந்திருப்பது [சார்ந்த] ஞானம், என்றும் மறக்க முடியாதது விஞ்ஞானம்!

## பனி, வெப்பத்தை விட கொடியது

சில இடங்களில் பனிப்பொழியும், அதைப்பற்றி உங்களுக்குத் தெரியுமா? இப்போது பனிப்பொழியும் இடத்தில், மிகவும் குளிராக இருக்கிறது, அல்லவா? அந்த பனி அனைத்து மரங்களையும், பருத்தி செடிகளையும், புல்களையும் எரித்துவிடுகிறது, அனைத்தும் எரிந்துபோகிறது. அதை பற்றி உங்களுக்கு தெரியும், அல்லவா? குளிரில் எல்லாம் ஏன் எரிந்துவிடுகிறது?

**கேள்வி கேட்பவர்**: குளிர் அதிகமாக இருப்பதால்.

**தாதாஸ்ரீ**: ஆம், அதைப்போல் நீங்களும் தனிந்த நிலையில் இருந்தால், உலக தொடர்புகளில் உயர்ந்த நடத்தை *(ஷீல்)* என்கிற நடத்தை எழும்.

## கோபம் எங்கே கரைகிறதோ, அங்கே நிலையான மற்றும் புனிதமான ஒளி இருக்கிறது

**கேள்வி கேட்பவர்**: ஆனால் தாதா, அளவுக்கு அதிகமாக அமைதியாக இருப்பதும் ஒருவித பலவீனம், அல்லவா?

**தாதாஸ்ரீ**: மிகவும் அமைதியாக இருக்க வேண்டிய அவசியமில்லை. நீங்கள் வரம்பிற்குள் இருக்க வேண்டும்; அது இயல்பு தன்மை என்று குறிப்பிடப்படுகிறது. உடலின் இயல்பு வெப்பநிலைக்கு கீழ் இருந்தாலும் காய்ச்சல், வெப்பநிலைக்கு மேல் இருந்தாலும் காய்ச்சல் தொண்ணூற்றெட்டு என்பது இயல்புநிலை. எனவே, உங்களுக்கு இயல்பு தன்மை மட்டுமே தேவை.

கோபப்படுபவர்களை விட கோபப்படாதவர்களிடம் மக்கள் அதிகம் பயப்படுகிறார்கள். அதற்கான காரணம் என்ன? கோபம் கரையும் போது, நிலையான மற்றும் புனிதமான ஒளி *(பிரதாப்)* எழுகிறது, அது இயற்கையின் விதி! இல்லையெனில், அத்தகைய நபரை பாதுகாக்க யாரும் இருக்க மாட்டார்கள். கோபம் ஒரு தற்காப்பு [இயந்திரம்]; அஞ்ஞான நிலையில், கோபத்தில் ஒருவர் தன்னை தற்காத்துக்கொள்வார்.

## எரிச்சல் கொண்ட நபர் கடைசி இடத்தையே பிடிக்கிறார்

**கேள்வி கேட்பவர்**: நியாயமான கோபம் மற்றும் நியாயமான ஆத்திரம் நல்ல விஷயமா? இல்லையா?

**தாதாஸ்ரீ**: மக்கள் அதை என்னவென்று அழைக்கிறார்கள்? குழந்தைகள் கூட, “அவர் எப்போதும் விபரீதமானவர்!” என்று சொல்வார்கள். ஆத்திரம் அடைவது என்பது முட்டாள்தனம்! ஆத்திரம் அடைவது ஒரு பலவீனமாக கருதப்படுகிறது. “உன் அப்பா எப்படிப்பட்டவர்?” என்று நாம் குழந்தைகளிடம் கேட்டால் அப்போது அவர்கள் கூட, “அவர் ஒரு கடுப்பான நபர்!” என்று சொல்வார்கள். இப்போது சொல்லுங்கள், அவரின் மரியாதை அதிகரித்ததா அல்லது குறைந்ததா? ஒருவருக்கு இந்த பலவீனம் இருக்கக்கூடாது. எனவே, நல்லொழுக்கம் இருக்கும் இடத்தில் பலவீனம் இருக்காது.

வீட்டில் உள்ள குழந்தைகளிடம், “உங்கள் வீட்டில் யாருக்கு முதலிடம் கொடுப்பீர்கள்?” என்று கேட்டால், அப்போது குழந்தைகள் மதிப்பிட்டு கூறுவார்கள், ‘என் அம்மாவுக்கு கோபம் வராது, அதனால் அவர் சிறந்தவர். அவர் நம்பர் ஒன்.’ பின்னர் இரண்டாவது, மூன்றாவது, என்று. பிறகு இறுதியாக, தந்தை கடைசி இடத்தில் இருப்பார்! அப்படி ஏன்? அவர் ஆத்திரம் அடைபவர் என்பதால் தான். அவர் ஒரு விபரீதமான நபர். நான் அவர்களிடம் கேட்டேன், “உங்கள் தந்தை பணம் சம்பாதிப்பவர்; அப்போதும் அவர் உங்கள் மதிப்பீட்டில் கடைசியா?” என்று அதற்கு அவர்கள், “ஆம்” என்று பதிலளித்தார்கள். சற்று யோசித்துப் பாருங்கள்! நீங்கள் கடினமாக உழைத்து, பணம் சம்பாதித்து அவர்களுக்கு உணவு வழங்குகிறீர்கள், இருப்பினும் நீங்கள் கடைசி இடத்தில் இருக்கிறீர்களா?

## கோபம் என்றால் குருட்டுத்தன்மை

**கேள்வி கேட்பவர்**: பொதுவாக, ஒருவர் கோபப்படுவதற்கு முக்கிய காரணம் எதுவாக இருக்கும்?

**தாதாஸ்ரீ**: அதற்கு காரணம் அவருடைய பார்வை தடைபடுவதே! ஒரு நபர் எப்போது சுவரில் மோதுகிறார்? சுவரை பார்க்க முடியாத போது தான் அதன் மீது மோதுவார், அல்லவா? அதைபோல், ஒருவரால் சிந்திக்க முடியவில்லை என்றால், அவர் கோபப்படுகிறார். முன்னோக்கி செல்வதற்கான தெளிவு அவருக்கு கிடைக்காததால், அவர் கோபப்படுகிறார்.

## புரிதல் இல்லாத போது தான் கோபம் எழுகிறது

கோபம் எப்போது எழுகிறது? பதில் என்னவென்றால், ஒருவரின் ஞான திருஷ்டி *(தர்ஷன்)* தடைபடும்போது, மேலும் அவரது ஞானம் *(ஞான்)* தடைபடுகிறது, அதனால்தான் கோபம் எழுகிறது. அதை போலவே தான் பெருமை கொண்டாலும் பார்வை தடைபடுகிறது, அதனால் ஞானம் தடைபடுகிறது, அதனால்தான் பெருமை எழுகிறது.

**கேள்வி கேட்பவர்**: தயவு செய்து இதை உதாரணங்களுடன் விளக்கவும்; புரிந்து கொள்ள எளிதாக இருக்கும்.

**தாதாஸ்ரீ:** "நீங்கள் எதனால் கோபப்பட்டீர்கள்" என்றும் மக்கள் கேட்பதுண்டு அல்லவா, கோபப்பட்டவர் அதற்கு என்ன காரணம் கூறுவார் என்றால் "என்னால் தெளிவாக சிந்திக்க முடியவில்லை அதனால் நான் கோபமடைந்தேன் என்பார்." ஆம், ஒருவரால் தெளிவாக சிந்திக்க முடியாத போது, அவர் கோபமடைந்துவிடுகிறார். புரிதல் உள்ளவர் கோபப்படுவாரா? ஒருவர் கோபப்படும்போது, கோபம் யாருக்கு முதல் பலனைத் தருகிறது? ஏதாவது ஒன்று தீ பிடித்துவிட்டால், அது முதலில் தன்னையே எரித்துக் கொள்கிறது. பின்னர் அது மற்றவர்களை எரிக்கிறது.

## கோபம் எனும் தீ தன்னையும் மற்றவர்களையும் எரித்துவிடும்

கோபம் என்பது தன்னுடைய வீட்டிற்கு தீ வைப்பதை போன்றது. நீங்கள், உங்கள் வீட்டில் வைக்கோலை நிரப்பி, அதற்கு தீ மூட்டுவதை போலதான், கோபத்தையும் குறிக்கப்படுகிறது. எனவே ஒருவர் முதலில் தன்னைத்தானே எரித்துக்கொள்கிறார், பிறகு மற்றவரை எரிக்கிறார்.

யாரோ ஒருவரது வயலில் நிறைய வைக்கோல் குவிக்கப்பட்டு இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம், அந்தக் குவியலில் ஒரு தீப்பொறி வீசினால் என்ன ஆகும்?

**கேள்வி கேட்பவர்:** அது எரியும்.

**தாதாஸ்ரீ**: அதைபோல், ஒரே ஒருமுறை கோபப்படுவதால், ஒருவர் தான் சேர்த்து வைத்த இரண்டு வருடங்களின் நற்பயன் அனைத்தையும் நஷ்டமாக்கி விடுகிறார். கோபம் என்றால் எரியும் நெருப்பு. 'எனக்கு பெரும் நஷ்டம் ஏற்பட்டுவிட்டது' என்பதை அந்த நபர் உணரமாட்டார். ஏனென்றால், வெளியில் உள்ளவை எதுவும் குறைவதில்லை, ஆனால் நம்முள் அனைத்தும் அழிந்துவிடுகிறது. அடுத்த பிறவிக்காக ஒருவர் செய்த ஏற்பாடுகளில், ஒரு பகுதி பயன்படுத்தப்படுகிறது. அதில் பெரும் பகுதியை பயன்படுத்தாவிட்டால் என்ன ஆகும்? இங்கே, ஒரு மனிதனாக, அவர் ரொட்டி சாப்பிட்டுக்கொண்டு இருந்தார், அதற்குப் பதிலாக அடுத்த பிறவியில் புல் சாப்பிட விலங்கு கதியில் பிறக்க வேண்டியிருக்கும். புல் சாப்பிடப் போவது என்பதை பெருமைக்குரியதாக கருதப்படுமா?

இவ்வுலகில் எந்த மனிதனும் கோபத்தை வெல்ல முடியாது. கோபம் இரண்டு பகுதிகளை கொண்டது. ஒரு பகுதி வெளிப்படுகிற

கோபம் மற்றொன்று மறைமுகமான கோபம். கோபத்தை வெல்லகூடியவர்கள், வெளிப்படுகிற கோபத்தை மட்டுமே வெல்கிறார்கள். உண்மை என்னவென்றால், [*கஷாய்;* கோபம்-பெருமை-கபடம்-பேராசை] இவற்றுள் ஏதேனும் ஒன்றை அடக்கும் போது, மற்றொன்று அதிகரிக்கிறது. "நான் கோபத்தை வென்றேன்" என்று ஒருவர் சொல்வார். அதனால் அவருடைய பெருமை அதிகரிக்கிறது. உண்மையில், ஒருவரால் கோபத்தை முழுமையாக வெல்ல முடிவதில்லை. [அத்தகைய நிகழ்வில்] ஒருவர் வெளிப்படும் கோபத்தை வென்றவராகக் கருதப்படுகிறார்.

## நீடித்த பாதிப்பை கொண்டிருப்பது கோபம்

நீடித்த பாதிப்பைக் கொண்ட கோபம் மட்டுமே *(தாண்தோ),* என்பதை க்ரோதம் *(க்ரோத்)* என்று குறிப்பிடப்படுகிறது. உதாரணத்திற்கு கணவன், மனைவி இருவரும் இரவில் சண்டையிட்டுவிட்டு பிறகு பயங்கர கோபமடைந்து, இருவரும் இரவு முழுவதும், படுக்கையில் விழித்திருந்தனர். காலையில், மனைவி அவருக்கு தேனீர் பரிமாறும்போது கோப்பையை பட்டென்று வைக்கிறார். எனவே, இன்னும் பாதிப்பு இருக்கிறது என்பதை கணவர் புரிந்துகொள்கிறார்! இது தான் *க்ரோத்* என்று குறிப்பிடப்படுகிறது. பாதிப்பு எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் நீடிக்கலாம்! ஒரு சிலர் தங்கள் வாழ்நாள் முழுவதும் அதை இறுகப்பிடித்துக் கொள்கிறார்கள்! தந்தை மகனைப் பார்க்கமாட்டார், மகன் தந்தையை பார்க்க மாட்டார்! கோபத்தின் நீடித்த பாதிப்பை ஒருவரது முகத்தில் உள்ள முகச்சுளிப்பின் அடிப்படையில் மட்டுமே கண்டறிய முடியும்.

நீடித்த பாதிப்பு என்னவென்றால், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு யாரோ ஒருவர் என்னை அவமதித்த ஒரு விஷயம்,

பதினைந்து ஆண்டுகளாக நான் அந்த நபரைக் சந்திக்கவில்லை, ஆனால் இன்று அந்த நபரை நான் சந்திக்கும் போது, அவரை சந்தித்தவுடன், எல்லாம் என் நினைவிற்கு வருகிறது; இது நீடித்த பாதிப்பு என்று குறிப்பிடப்படுகிறது. எப்படியிருந்தாலும், நீடித்த பாதிப்பை யாராலும் கரைக்க முடியாது. சந்நியாசி மற்றும் துறவிகள் கூட நீடித்த பாதிப்பைப் பற்றிக்கொண்டுள்ளனர். நீங்கள் இரவில் அவர்களை சீண்டினால், பதினைந்து நாட்களுக்கு அவர்கள் உங்களிடம் பேசமாட்டார்கள். அது ஒரு நீடித்த பாதிப்பு!

## வருத்தம் *(குஸ்ஸோ)* மற்றும் கோபம் *(க்ரோத்)* இடையே உள்ள வேறுபாடு

**கேள்வி கேட்பவர்**: தாதா, வருத்தப்படுதல் *(குஸ்ஸோ)* மற்றும் கோபம் *(க்ரோத்)* இடையே உள்ள வேறுபாடு என்ன?

**தாதாஸ்ரீ**: *க்ரோத்* என்பது அஹங்காரத்தினால் ஏற்படுவது. *குஸ்ஸோ* மற்றும் அஹங்காரம் ஒருங்கிணைக்கப்பட்டால், அதை *க்ரோத்* என்று குறிப்பிடப்படுகிறது. ஒரு தந்தை தன் மகனிடம் கோபம் கொண்டால், அது *க்ரோத்* என்று கருதப்படுவதில்லை. அந்தக் கோபத்தில் அஹங்காரம் உள்ளடங்கவில்லை. அதனால்தான் இதை *குஸ்ஸோ* என்று குறிப்பிடப்படுகிறது. எனவே இறைவன் கூறியிருப்பது என்னவென்றால், “அவருக்கு [தந்தைக்கு] *குஸ்ஸோ* இருந்தாலும் சரி, புண்ணிய கர்மா அவருடைய கர்ம கணக்கில் சேர்த்துவிடுங்கள்.” அதற்கு ஒருவர் கேட்கலாம், “அவரிடம் *குஸ்ஸோ* இருந்தும் கூடவா?” அப்போது இறைவன் கூறுகிறார், “இல்லை, ஒருவரிடம் *க்ரோத்* இருந்தால் அவர் பாவ கர்மாவை கட்டுண்டு விடுகிறார், ஆனால் *குஸ்ஸோ* அடைந்தால் பாவ கர்மா பிணைக்கப்படுவது இல்லை.” *க்ரோத்* என்பதில் அஹங்காரம் உள்ளடங்கி இருக்கிறது, ஆனால்

உங்களுக்கு குஸ்ஸோ எழும்போது, உங்களுக்குள் வருத்தம் ஏற்படுகிறது, அல்லவா?

கோபம் - பெருமை - கபடம் - பேராசை இவை இரண்டு வகைப்படும்.

ஒரு வகையான கோபம் எப்படி என்றால், அதை வராமல் அடக்கிவிடலாம்; அது தடுக்கக்கூடியது. யாரிடமாவது கோபம் எழுந்தால், அதை உள்ளிருந்து அடக்கிவிட்டு, அமைதியாக்கி விடலாம். அத்தகைய கோபத்தை வராமல் அடக்கிவிடலாம். ஒருவர் இந்த நிலையை அடைந்துவிட்டால், அவரது உலகிய தொடர்புகள் மிகவும் இனிமையானதாகிவிடும்!

மற்ற வகையான கோபம் எப்படியானது என்றால், அதை அடக்க முடியாது; அது தடுக்க முடியாதது. ஒருவர் மிகவும் கடினமாக முயற்சி செய்யலாம், ஆனால் ‘பட்டாசை போல்’ அவசியம் வெடித்துவிடும்! தவிர்க்க முடியாது. அத்தகைய கோபத்தை அடக்கவும் முடியாது, தடுக்கவும் முடியாது. இவ்வகையான கோபம் தனக்கும் மற்றவருக்கும் தீங்கு விளைவிக்கக்கூடியது!

ரிஷிகள், துறவிகள் விஷயத்தில் கோபத்தை இறைவன் எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்கிறார்? மற்றவரை துன்பதாமல் இருப்பது; அந்த அளவுக்கு கோபத்தை இறைவன் ஏற்றுக்கொள்கிறார். தான் மட்டும் துன்பப்பட்டுக் கொண்டு மற்ற யாரையும் துன்பப்படுத்தாமல் இருக்கும் ஒருவரின் கோபத்தை இறைவன் ஏற்றுக்கொள்வதாக கருதுகிறார்.

## அறிபவரை அறிந்துகொள்ளுங்கள்

**கேள்வி கேட்பவர்**: கோபப்படுவது தீங்கானது என்பது நம் அனைவருக்கும் தெரிந்ததே. ஆனாலும் ....

**தாதாஸ்ரீ**: கோபப்படுபவருக்கு அது தெரியாது. பேராசை உடையவருக்கு அது தெரியாது, பெருமையுடையவருக்கு அது தெரியாது; அதை அறிபவர் வேறு. ஆனால் இந்த மக்கள் தங்கள் மனதில் என்ன நினைத்துக்கொள்கிறார்கள் என்றால், எனக்கு இதுவெல்லாம் தெரியும், இருந்தும் இப்படி ஏன் நடக்கிறது? இப்போது 'எனக்கு தெரியும் என்று சொல்பவர் யார்?' இது அவர்களுக்குத் தெரியாது. யார் அறிபவர் என்பது அவர்களுக்கு தெரியாது. இதை மட்டும்தான் அவர்கள் கண்டுபிடிக்க வேண்டிய ஒரே விஷயம். ஒருவர் அறிபவரை கண்டுபிடித்தால், பிறகு அனைத்திலிருந்தும் விடுபட முடியும். ஒருவர் அதைப் பற்றி அறிந்துகொள்ளாமல் இருக்கிறார். அறிந்துகொண்டால் அது (கோபம்-பெருமை-கபடம்-பேராசை) விலகிவிடும். அது நிலைத்து நிற்காது.

## ஒரு முறை அறிந்து கொள்வது தான் சரியான தீர்வு

**கேள்வி கேட்பவர்**: அதை பற்றி தெரிந்திருந்தும், கோபம் எழுகிறது. எப்படி அதை தடுக்க முடியும்?

**தாதாஸ்ரீ**: அதை தெரிந்தவர் யார்? அதை அறிந்த பிறகு கோபமே வராது. கோபம் எழுகிறது என்பதால், நீங்கள் அறியவில்லை என்று அர்த்தம். 'எனக்குத் தெரியும்' என்ற அஹங்காரத்தை மட்டும் வெளிப்படுத்துகிறீர்கள்.

**கேள்வி கேட்பவர்**: கோபம் எழுந்த பிறகு, 'நான் கோபம்

கொள்ள கூடாது’ என்ற விழிப்புணர்வு ஏற்படுகிறது.

**தாதாஸ்ரீ**: இல்லை, ஆனால் அறிந்த பிறகு, கோபம் எழாது. இங்கே இரண்டு பாட்டில்கள் வைக்கப்பட்டுள்ளன என்று வைத்துக்கொள்வோம், அதில் ஒன்றில் மருந்து இருப்பதாகவும், மற்றொன்றில் விஷம் இருப்பதாகவும் ஒருவர் சொல்கிறார். இரண்டு பாட்டில்களும் ஒரே மாதிரியாகத் தெரிகின்றன, ஆனால் ஒருவர் தவறு செய்தால், அந்த நபருக்குத் தெரியாது, என்பதை நாம் புரிந்து கொள்ளலாம், அல்லவா? அவர் தவறு செய்யவில்லை என்றால், அந்த இரு பாட்டிலில் என்ன இருக்கிறது என்று அவருக்குத் தெரிந்திருக்கிறது என்று சொல்லலாம். ஆனால், தவறு நடந்ததால், அவருக்கு அந்த பாட்டிலில் என்ன இருக்கிறது என்று தெரியவில்லை என்பது முடிவாகிவிட்டது. அதேபோல், கோபம் எழும்போது, உண்மையில் உங்களுக்கு எதுவும் தெரியாது; தேவையில்லாமல் ‘எனக்குத் தெரியும்’ என்ற அகந்தையுடன் அலைகிறீர்கள். ஒளியின் முன்னிலையில் தடுமாறுவீர்களா? ஆகையால், நீங்கள் தடுமாறும் வரை, நீங்கள் எதுவும் அறிந்திருக்கவில்லை என்று தான் அர்த்தம். நீங்கள் உண்மையில் இருளைத்தான் ஒளி என்று குறிப்பிடுகிறீர்கள், அது உங்களுடைய தவறு. எனவே, இந்த ஆன்மீக சொற்பொழிவில் *(சத்சங்)* உட்காருங்கள் மற்றும் அதை ஒரு முறை அறிந்து கொள்ளுங்கள்; பிறகு கோபம்-பெருமை-கபடம்-பேராசை எல்லாம் கரைந்துவிடும்.

**கேள்வி கேட்பவர்**: ஆனால் எல்லோருக்கும் கோபம் எழுகிறது!

**தாதாஸ்ரீ**: இந்த நபரிடம் கேளுங்கள், அவர் அதை மறுக்கிறார்.

**கேள்வி கேட்பவர்**: *சத்சங்கம்* வந்த பிறகு, கோபம் கண்டிப்பாக எழாது!

**தாதாஸ்ரீ**: அப்படியா? என்ன மாதிரியான 'மருந்து' அவர் சாப்பிட்டிருக்க வேண்டும்? வெறுப்பின் அடிப்படையை ஒழிக்க அவர் அத்தகைய 'மருந்து' எடுத்துள்ளார்.

## சரியான புரிதல் மூலம் [அதை கட்டுப்படுத்தவும்]

**கேள்வி கேட்பவர்**: எனக்கு நெருக்கமான ஒருவருடன் நான் கோபப்படுகிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். அவர் தனது கருத்தின்படி சரியாக இருக்கலாம். எனினும் என் கருத்தின் படி நான் கோபப்பட்டு விடுகிறேன், எந்த காரணத்தினால் நான் கோபப்படுகிறேன்?

**தாதாஸ்ரீ**: நீங்கள் நடந்து கொண்டிருக்கும்போது, ஒரு கட்டிடத்திலிருந்து ஒரு கல் உங்கள் தலையில் விழுந்து இரத்தம் வர ஆரம்பித்தால், அப்போது நீங்கள் கோபப்படுவீர்களா?

**கேள்வி கேட்பவர்**: இல்லை, அது நிகழ்ந்துவிட்டது.

**தாதாஸ்ரீ:** இல்லை,ஆனால் அந்த சூழ்நிலையில் நீங்கள் ஏன் கோபப்படுவதில்லை? ஏனென்றால் அங்கே நீங்கள் யாரையும் பார்க்கவில்லை, பிறகு கோபம் எப்படி வரும்?

**கேள்வி கேட்பவர்**: யாரும் வேண்டுமென்றே கல்லை எறியவில்லை.

**தாதாஸ்ரீ**: இப்போது நீங்கள் வெளியே செல்லும் போது ஒரு பையன் உங்கள் மீது கல்லை எறிந்தால், அதில் அடிபட்டு இரத்தம் வரத் தொடங்கினால், நீங்கள் அவர் மீது கோபப்படுவீர்கள். அது ஏன்? "அந்த பையன் என் மீது கல்லை எறிந்தான், அதனால்தான் எனக்கு இரத்தம் வந்தது" என்று நீங்கள் கூறுவீர்கள். "ஏன் எறிந்தாய்?" என்று கோபித்துக் கொள்வீர்கள். அதேசமயம் மலையிலிருந்து, ஒரு

கல் உருண்டு வந்து, அது உங்கள் தலையில் விழுந்து, இரத்தம் வர ஆரம்பித்தால், நீங்கள் அங்கும் இங்கும் பார்ப்பீர்கள், ஆனால் நீங்கள் கோபப்படமாட்டீர்கள்!

மற்றொரு சூழ்நிலையில், ஒரு நபருக்கு, 'உண்மையில் இந்த நபர் தான் இதை செய்கிறார்' என்று தோன்றுகிறது. யாராலும் வேண்டுமென்றே இன்னொருவரை அடிக்க முடியாது. எனவே, மலையிலிருந்து ஒரு கல் உருண்டு விழுந்தாலும் அல்லது ஒரு நபர் உங்கள் மீது கல்லை எறிந்தாலும், உண்மையில் இரண்டும் ஒன்றுதான். இருப்பினும், மாயையின் காரணமாக 'இவர் செய்கிறார்' என்று தோன்றுகிறது. இந்த உலகில் நினைத்த நேரத்தில் மலம் கழிக்கும் சக்தி படைத்தவர் யாரும் இல்லை.

யாரும் வேண்டுமென்றே அடிக்கவில்லை என்பது உங்களுக்குத் தெரியும், எனவே அந்த சூழ்நிலையில் நீங்கள் கோபப்படுவதில்லை. மேலும், "நான் கோபப்பட்டுவிடுகிறேன். நான் இயல்பிலேயே முன்கோபம் கொண்டவன்." மனிதனே, கோபம் கொள்வது உனது இயல்பில் இல்லை. காவல்துறை அதிகாரியிடம் ஏன் கோபித்துக் கொள்வதில்லை? ஒரு போலீஸ் அதிகாரி உங்களை திட்டினால், நீங்கள் ஏன் கோபப்படுவதில்லை? நீங்கள், உங்கள் மனைவியுடன் கோபப்படுகிறீர்கள், குழந்தைகள், அண்டை வீட்டாரிடம் கோபப்படுகிறீர்கள், உங்களுக்கு கீழ் பணிபுரிபவர்களிடம் நீங்கள் கோபப்படுகிறீர்கள், ஆனால் உங்கள் முதலாளியிடம் ஏன் கோபப்படுவதில்லை? ஒருவரின் உள்ளார்ந்த இயல்பினால், கோபம் ஒருவரில் எழ முடியாது. உண்மையில், ஒருவர் தான் விரும்பியதை செய்ய விரும்புகிறார்.

**கேள்வி கேட்பவர்**: அதை எப்படி கட்டுப்படுத்த முடியும்?

**தாதாஶ்ரீ**: புரிதல் மூலம். நீங்கள் சந்திக்கும் நபர் உண்மையில் இந்த செயல்பாட்டில் கருவியாக இருக்கிறார் மற்றும் உங்களின் கர்ம பலனை உங்களுக்கு வழங்குகிறார். அவர் செயல்பாட்டில் கருவியாகிவிட்டார். இப்போது இதை புரிந்துகொண்டால், கோபம் கட்டுக்குள் வந்துவிடும். மலையிலிருந்து கல் விழுவதைக் காணும்போது, உங்களால் கோபத்தை கட்டுப்படுத்திக்கொள்ள முடிகிறது. அதைப் போலவே, இங்கேயும், இவை அனைத்தும் உண்மையில் ஒரு மலை போன்றது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

சாலையின் தவறான திசையில் இருந்து ஒரு கார் உங்களை நோக்கி வந்தால், நீங்கள் கார் ஓட்டுனரை திட்டமாட்டீர்கள், அல்லவா? நீங்கள் அவர் மீது கோபப்படமாட்டீர்கள், அல்லவா? ஏன்? நீங்கள் அந்த கார் மீது மோதி அதை நொறுக்கி விடுவீர்களா? இல்லை. நீங்கள் ஏன் அங்கே, அப்படி செய்வதில்லை? அந்தச் சூழ்நிலையில், 'நான் இறந்துவிடுவேன்' என்பதினால் நீங்கள் புத்திசாலித்தனமாக செயல்படுகிறீர்கள். மாறாக, மனிதனே, நீங்கள் கோபப்படும் போது மேலும் அதிகமாக இழந்துவிடுகிறீர்கள். இருப்பினும், நீங்கள் அங்கு முழுமையான நிகழ்வை பார்க்க முடிவதில்லை, ஆனால் மற்றொரு விஷயத்தில், அது வெளிப்படையாகக் காணப்படுகிறது; அது மட்டுமே வித்தியாசம்! நீங்கள் சாலையில் பழிவாங்குவீர்களா? தவறு மற்றவருடையதாக இருந்தாலும் நீங்கள் கோபப்படுவீர்களா?

**கேள்வி கேட்பவர்**: இல்லை.

**தாதாஶ்ரீ:** அதேபோல், வாழ்க்கையிலும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

## காரணங்கள் மாறும் போது தான் விளைவுகள் மாறும்

ஒரு மனிதர் என்னிடம் கேட்டார், “நான் இந்த கோபத்திலிருந்து விடுபட எண்ணற்ற வாழ்வுகளில் முயற்சிக்கிறேன், ஆனால் இந்த கோபம் ஏன் நீங்கவில்லை?” நான் சொன்னேன், “கோபத்தை போக்குவதற்கான தீர்வு உங்களுக்கு தெரியாமல் இருக்கலாம்.” அதற்கு அவர் பதிலளித்தார், “கோபத்தைப் போக்குவதற்கான தீர்வுகள் வேதங்களில் எழுதப்பட்டுள்ளன; நான் அதையெல்லாம் செய்து கொண்டிருக்கிறேன், எனினும் கோபம் நீங்குவதில்லை.” நான் அவரிடம் சொன்னேன், “தீர்வு சரியானதாக இருக்க வேண்டும்.” அவர் கூறினார், “நான் பல சரியான தீர்வுகளை படித்துள்ளேன், ஆனால் எதுவும் பயனளிக்கவில்லை.” அதற்கு நான் அவரிடம் கூறினேன், “கோபத்தைத் தடுக்க ஒரு தீர்வை கண்டுபிடிக்க முயற்சிப்பது முட்டாள்தனம். ஏனென்றால் கோபம் உண்மையில் ஒரு விளைவு. நீங்கள் ஒரு தேர்வில் தேர்ச்சி பெற்று அதன் முடிவை பெற்று விட்டதைப்போல்; இது விளைவிலிருந்து விடுபட முயற்சி செய்வதற்குச் சமம். கிடைத்திருக்கும் இந்த முடிவு, எதற்கான பலன்? அதைத்தான் நீங்கள் மாற்ற வேண்டும்.”

“கோபத்தை அடக்கிக்கொள், கோபத்தை ஒழித்து விடு”, என்று மக்கள் கூறுகின்றனர். ஹே, ஏன் இப்படி செய்கிறீர்கள்? தேவையில்லாமல் தலைவலியை உண்டாக்கிக் கொள்கிறீர்கள்! அப்படி இருந்தும் கோபம் உண்மையில் நீங்குவதில்லை. எனினும் அவர் கூறுவது என்னவென்றால், “இல்லை ஐயா, என் கோபத்தை ஓரளவு கட்டுப்படுத்திவிட்டேன்.” ஹே! அது உள்ளே இருக்கும் வரை, அது கட்டுப்பாட்டிற்குள் இருக்கிறது என்று கருதமுடியாது. அதற்கு அந்த மனிதன், “அப்படியானால் உங்களிடம் வேறு ஏதாவது தீர்வு

உண்டா?" என்று கேட்டார், அதற்கு நான் "ஆம், ஒரு தீர்வு இருக்கிறது. நீங்கள் செய்வீர்களா?" என்றேன், அதற்கு அவர், "ஆம்" என்று பதிலளித்தார். பிறகு நான் அவரிடம் கூறினேன், "உலகில் யாரிடம் அதிக கோபம் கொள்கிறீர்கள் என்று ஒரு முறையாவது குறித்து கொள்ளுங்கள்." எங்கெல்லாம் கோபம் வருகிறதோ அதை குறித்து கொள்ளுங்கள் மற்றும் எங்கெல்லாம் கோபம் வரவில்லையோ அதையும் தெரிந்து கொள்ளுங்கள், இவரிடம் எனக்கு கோபம் வருவதில்லை என்று ஒருமுறை பட்டியலில் சேர்த்துவிடுங்கள். பலர் தவறு செய்தாலும், நீங்கள் அவர்களிடம் கோபப்படுவதில்லை, ஆனால் மற்றவர்கள் சிலர் சரியாக செய்தாலும், நீங்கள் அவர்கள் மீது கோபப்படுவீர்கள். எனவே, அதற்கு ஏதாவது காரணம் இருக்க வேண்டும், சரியா?

**கேள்வி கேட்பவர்**: அந்த நபரை பற்றி நம் மனதில் ஒரு முடிச்சு பிணைக்கப்பட்டிருக்குமா?

**தாதாஸ்ரீ**: ஆம், ஒரு முடிச்சு பிணைக்கப்பட்டுள்ளது. இந்த முடிச்சை விடுவிக்க இப்போது என்ன செய்ய வேண்டும்? தேர்வு ஏற்கனவே கொடுக்கப்பட்டுவிட்டது. நீங்கள் அந்த நபருடன் எத்தனை முறை கோபப்படப் போகிறீர்களோ, அத்தனை முறை கோபப்படுவீர்கள். அந்த நபருக்கான முடிச்சு ஏற்கனவே உருவாகிவிட்டது, ஆனால் இனி நீங்கள் என்ன செய்ய வேண்டும்? நீங்கள் யாரிடம் கோபப்படுகிறீர்களோ, அந்த நபரிடம் உங்கள் மனது எதிர்மறையாக மாற அனுமதிக்காதீர்கள். உங்கள் மனதை நீங்கள் சீர்திருத்த வேண்டும், 'இவர் எனது விதியின் காரணமாக இதைச் செய்கிறார். அவர் என்ன செய்தாலும் அது என் கர்மாவின் வெளிப்படுதலால் தான், அவர் செய்கிறார்.' இப்படி உங்கள் மனதை சீர்திருத்த வேண்டும். நீங்கள் உங்கள் மனதை சீர்திருத்திக்

கொண்டே இருந்தால், அந்த நபரின் மீது உங்கள் மனது சீர்திருத்தம் ஆகிவிட்டால், நீங்கள் அந்த நபரிடம் கோபப்படுவதை நிறுத்திவிடுவீர்கள். கடந்த காலத்தின் விளைவு சில காலம் இருக்கும், விளைவுகளை ஏற்படுத்திவிட்டு அது நின்றுவிடும்.

இது மிகவும் நுட்பமான விஷயம் ஆனால் மக்கள் அதை கண்டுபிடிக்கவில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு தீர்வு இருக்கிறது, அல்லவா? தீர்வுகள் இல்லாமல் உலகம் நீடிக்காது, அல்லவா! உலகம் விளைவுகளை அழிக்க மட்டுமே முயற்சிக்கிறது. எனவே, கோபம்-பெருமை-கபடம்-பேராசைக்கு இதுவே தீர்வு. விளைவை எதுவும் செய்ய வேண்டாம்; நீங்கள் விளைவுகளின் காரணங்களை அழித்துவிட்டால், அனைத்து விளைவுகளும் நீங்கிவிடும். எனவே, ஒருவர் சிந்தனையாளராக இருக்க வேண்டும். இல்லையெனில், அதைப்பற்றி ஒருவருக்கு தெரியாவிட்டால், அவர் எப்படி தீர்வு காண்பார்?

**கேள்வி கேட்பவர்**: காரணங்களை எப்படி அழிக்க முடியும்? அதை மற்றொரு முறை விளக்கவும்!

**தாதாஸ்ரீ**: நான் இந்த மனிதனுடன் தொடர்ந்து கோபப்படுகிறேன் என்றால் அதற்கு நான் முன்பு அவரிடம் குறைகளை கண்டதன் விளைவு தான் என்கிற முடிவுக்கு வருகிறேன். அதனால் தான் அவர் மீது கோபம் அடைகிறேன். இப்போது எந்த தவறு அவர் செய்தாலும், அதனால் என் மனம் பாதிப்படையவில்லை என்றால், அவர் மீதான கோபம் படிப்படியாக நீங்கிவிடும். இருப்பினும், கடந்த காலத்தின் சில விளைவுகள் மீதம் இருந்தால், அவை வெளிப்படும், ஆனால் மற்ற அனைத்தும் நீங்கிவிடும்.

**கேள்வி கேட்பவர்**: பிறருடைய குறைகளைக் கண்டு கோபம் எழுகிறதா?

**தாதாஸ்ரீ**: ஆம். நீங்கள் பார்க்கும் தவறுகள், தவறான விளைவுகளே என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். எனவே, இந்த தவறான விளைவுகளை நீங்கள் பார்ப்பதை நிறுத்தும்போது, கோபம் நீங்கிவிடும். நீங்கள் குறைகள் காண்பதை நிறுத்தினால், அனைத்தும் நீங்கிவிடும்.

## கோபத்தின் மூலகாரணம் அஹங்காரம்

“எனது கோபத்தை போக்க நான் என்ன மருந்து சாப்பிட வேண்டும்?” என்று மக்கள் கேட்பார்கள். அதற்கு நான் கேட்பேன், “நீங்கள் இப்போது என்ன செய்கிறீர்கள்?” என்று. “நான் கோபத்தை அடக்கிக் கொண்டிருக்கிறேன்” என்று கூறுவார்கள். நான் கேட்பேன், “நீங்கள் அதை அடையாளம் கண்டு அடக்குகிறீர்களா அல்லது அடையாளம் தெரியாமல் அதை அடக்குகிறீர்களா? நீங்கள் கோபத்தை அடையாளம் காண வேண்டும், அல்லவா? கோபம் மற்றும் அமைதி இரண்டும் ஒன்றாக ‘அமர்ந்து’ இருக்கிறது. இப்போது, நீங்கள் கோபத்தை அடையாளம் காணவில்லை என்றால், நீங்கள் அமைதியை அடக்குகிறீர்கள், மாறாக, அமைதி ‘இழந்துவிடும்’! எனவே, இதை அடக்குவது மதிப்புக்குரியது அல்ல! அதனால் கோபம் என்பது அஹங்காரம் என்று அவர்கள் புரிந்துகொள்வார்கள். அப்படியானால் எந்த வகையான அஹங்காரம் மூலம் கோபம் ஏற்படுகிறது? என்பதை நீங்கள் ஆராய வேண்டும்.

இந்தக் குழந்தை கண்ணாடி கோப்பையை உடைத்ததும், நீங்கள் கோபப்பட்டீர்கள். அச்சமயத்தில், எந்த மாதிரியான அஹங்காரம் மேலோங்கியது? ‘இந்த கண்ணாடி கோப்பையை நான் இழந்தேன்’; என்ற அஹங்காரம் மேலோங்கியது. லாபம் மற்றும் நஷ்டம் என்ற அஹங்காரம் உங்களுக்கு உள்ளது. எனவே லாபம்,

நஷ்டம் என்ற அஹங்காரத்தைப் பற்றி சிந்தித்து அதை ஒழிக்க வேண்டும். தவறான அஹங்காரத்தை தக்கவைத்துக்கொள்வதால் கோபப்பட்டுக் கொண்டே இருப்பீர்கள். உண்மையில், இந்த கோபம், இந்த பேராசை ஆகியவற்றின் அடிப்படை அஹங்காரம் தான்.

## எந்த புரிதல் மூலம் கோபத்தை அடக்க முடியும்?

கோபம் என்பதே அஹங்காரம். இப்போது நீங்கள் அதை ஆராய வேண்டும், அது எந்த வகையில் அஹங்காரம் என்பதை நீங்கள் ஆராய வேண்டும். இதை ஆராயும்போதுதான் கோபம் என்பது அஹங்காரம் என்பதை உங்களால் கண்டுபிடிக்க முடியும். ஏன் கோபம் எழுகிறது? ஒருவர் சொல்வார், “இந்தப் பெண் கோப்பையும் தட்டும் உடைத்தார்; அதனால்தான் நான் கோபப்பட்டேன்.” இப்பொது, அவள் கோப்பையும் தட்டும் உடைத்தாள், அதனால் உனக்கு என்ன பிரச்சினை? “எனக்கு நஷ்டம் ஏற்பட்டது” என்று பதிலளிப்பார். மேலும் நஷ்டம் அடைந்ததால், அந்த நபரைத் திட்ட வேண்டும் என்று அர்த்தமா? இருப்பினும், அஹங்காரம் வெளிப்படுத்துவதை, யாரையாவது திட்டுவதை, இதையெல்லாம் நீங்கள் நுணுக்கமாக சிந்தித்தீர்கள் என்றால், அதை சிந்திப்பதின் மூலம், அந்த அஹங்காரம் அனைத்தையும் முழுவதையும் நீக்கிவிடலாம். இப்பொது கோப்பை உடைந்தது என்பது தவிர்க்கக்கூடியதா அல்லது தவிர்க்க முடியாததா? தவிர்க்க முடியாத சூழ்நிலைகள் உள்ளன, அல்லவா? ஆனால் வீட்டு வேலைக்காரரை, வீட்டு எஜமான், “ஹே, கோப்பையும் தட்டும் ஏன் உடைத்தாய்? உனது கைகள் முறிந்திருக்கிறதா? நீ இப்படி இருந்தாய், நீ அப்படி இருந்தாய்” என்றெல்லாம் திட்டுவார். அது தவிர்க்க முடியாதது என்றால், அவர் வீட்டு வேலைக்காரரை திட்ட வேண்டுமா?

மருமகன் கையில் கோப்பையும் தட்டும் உடைந்தால், அங்கே அமைதியாக இருக்கிறீர்கள்! ஏனென்றால், மேலானவர் என்றால், நீங்கள் அமைதியாக இருக்கிறீர்கள்! ஆனால் தாழ்ந்தவர் என்றால், நீங்கள் அவரை இழிவு படுத்துகிறீர்கள்! இதெல்லாம் அஹங்காரம். எல்லாரும் ஒரு மேலானவர் முன் அமைதியாகி விடுகிறார்கள் அல்லவா? தாதாவின் கைகளால் ஏதேனும் உடைந்தால், யாருடைய மனதிலும் எதுவும் எழாது, ஆனால் அது வீட்டு வேலைக்காரரின் கைகளால் உடைந்தால் என்ன ஆகும்?

இந்த உலகம் நீதியைக் கண்டதில்லை. இதற்கெல்லாம் காரணம், புரிதல் இல்லாததுதான். இருந்தாலும், புத்தியின் மூலம் புரிந்துகொள்வது போதுமானது! புத்தி மேம்பட்டு இருந்தால், புரிந்து கொள்ளும் தன்மை இருந்தது என்றால், சண்டையே வராது. இப்போது, சண்டையிடுவதினால் கோப்பையும் தட்டும் மீண்டும் சிதையாத முந்தைய நிலைக்கு வந்துவிடுமா? ஒருவர் கோபப்படுவதினால் திருப்தியை மட்டும்தான் அடைகிறார், அல்லவா? மேலும், சச்சரவு உண்டாகிறது; மற்றொன்று மனதில் எழும் மோதல். ஆதலால், இந்த 'வியாபாரத்தில்' கண்ணாடியின் நஷ்டம், இரண்டாவதாக, சண்டையிடுவதினால் ஏற்படும் நஷ்டம், மூன்றாவது நஷ்டம், நம் மீது வீட்டு வேலைக்காரரின் பழிவாங்கும் பிணைப்பு! வீட்டு வேலைக்காரர், 'நான் ஏழை, அதனால்தான் என்னிடம் இப்படிச் சொல்கிறார், அல்லவா?' என்று பழிவாங்கும் பிணைப்பு உங்களிடம் ஏற்படுத்திக்கொள்கிறார். இருப்பினும், அந்த பழி வாங்குவதிலிருந்து நீங்கள் தப்ப முடியாது, மேலும் இறைவன் சொல்கிறார், "யாருடனும் பழி பிணைப்பிற்குள்ளாகாதீர்கள். தூய அன்பை பிணைக்க முடிந்தால், தூய அன்பைக் காட்டுங்கள், ஆனால் பழிவாங்கும் பிணைப்பை பிணைக்காதீர்கள்." ஏனென்றால் நீங்கள் தூய அன்பை பிணைத்தால்,

தூய அன்பு தானாகவே பழிவாங்கும் பிணைப்பை அகற்றிவிடும். தூய அன்பு என்பது பழிவாங்கும் 'தீவிரத்தை' வேரோடு பிடுங்கி எறிந்துவிடும். பழிவாங்குதல் உண்மையில் பழிவாங்குதலின் மூலம் அதிகரிக்கிறது. அது தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே இருக்கும். இந்த உலகில் அலைந்து திரிவது எல்லாம் உண்மையில் பழிவாங்கும் செயலால் தான்! இந்த மனிதர்கள் ஏன் அலைகிறார்கள்? இவர்கள் தீர்த்தங்கரர் பகவான் (மற்றவர்களை விடுவிக்கக்கூடிய முழுமையான ஞானம் பெற்ற பகவான்) அவர்களை சந்திக்கவில்லையா? அதற்கு அவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் தீர்த்தங்கரர் பகவான் அவர்களை சந்தித்தோம், நாங்கள் அவர்கள் சொல்வதை கேட்டோம், அவர்கள் சொன்னபடி செய்தோம், அவர்களுடைய *(தேஷ்னா)* அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட அஹங்காரமற்ற பேச்சு கேட்டோம், ஆனால் எதுவும் மாறவில்லை."

நீங்கள் எந்த வகையான சிரமங்களை எதிர்கொள்கிறீர்கள்? எதிர்ப்பை எங்கே எதிர்கொள்கிறீர்கள்? அந்த எதிர்ப்பை உடைக்க வேண்டும். தொலைநோக்கு பார்வையின்மையால் ஒருவர் எதிர்ப்பை சந்திக்கிறார். *(ஞானி புருஷ்)* ஆத்ம அனுபவம் பெற்ற ஒருவர் மற்றவர்களுக்கும் ஆத்ம ஞானம் வழங்கக்கூடியவர் 'தொலைநோக்கு பார்வை' வழங்குகிறார்; அந்த தொலைநோக்கு பார்வையின் அடிப்படையில், ஒருவர் ஒரு விஷயத்தை எப்படி இருக்கிறதோ அப்படியே பார்க்க முடியும்!

## குழந்தைகள் மீது கோபம் எழுந்தால் ...

**கேள்வி கேட்பவர்**: என் குழந்தைகளிடம் கோபம் வந்தால் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஶ்ரீ**: புரிதல் இல்லாததால் கோபம் எழுகிறது. நீங்கள் உங்கள் குழந்தையிடம், “நீங்கள் என் கோபத்தை ரசித்தீர்களா?” என்று கேட்டால், அவர், “நான் மிகவும் வருத்தப்பட்டேன்; நான் மிகுந்த வேதனைபட்டேன்” என்று கூறுவார். குழந்தையும் துன்பப்படுவார், நீங்கள் துன்பப்படுகிறீர்கள்! பிறகு, குழந்தையுடன் கிளர்ந்தெழ வேண்டிய அவசியம் என்ன? மேலும், நீங்கள் கிளர்ச்சியடைந்ததினால்; குழந்தை மேம்பட்டால், கண்டிப்பாக நீங்கள் கிளர்ச்சியடைய வேண்டும். அது நல்ல பலனைக் கொடுத்தால், கிளர்ச்சி அடைவதில் தவறு இல்லை. எனினும் நல்ல பலனைத் தரவில்லை என்றால் கிளர்ந்தெழுவதில் என்ன பயன்! கோபப்படுவதில் பலன் இருந்தால், நீங்கள் கோபப்படுங்கள்; கோபப்படுவதில் பலன் இல்லை என்றால், நீங்கள் கோபப்படாமல் குழந்தைகளை வழிநடத்த வேண்டும்!

**கேள்வி கேட்பவர்**: நான் கோபப்படவில்லை என்றால் என் பேச்சை கேட்கவே மாட்டான், சாப்பிடவே மாட்டான்!

**தாதாஶ்ரீ**: நீங்கள் அவனிடம் கோபப்பட்ட பிறகும் அவன் உங்கள் பேச்சைக் கேட்பதை போல் தெரியவில்லை!

## முழுமையாக உலக வாழ்க்கையில் இருந்து விடுபட்டு இருக்கும் இறைவனின் நுணுக்கத்தை பாருங்கள்

இருப்பினும், மக்கள் கூறுவது என்னவென்றால், “இந்த தந்தை தன் மகன் மீது மிகவும் கோபம் அடைந்துவிட்டதால், இந்த தந்தை மதிப்பற்றவர்” என்று. எனினும், இயற்கையின் நீதிமன்றத்தில் எத்தகைய நீதி இருக்கும்? இயற்கை, “இந்த தந்தைக்கு புண்ணிய கர்மாவை சேர்த்துவிடுங்கள்” என்று கூறுகிறது. அவர் கோபம் கொள்கிறார், எனினும் அது புண்ணிய கர்மாவின் பகுதியாக

கருதப்படுகிறதா? ஆம், ஏனெனில் தந்தை தன் குழந்தையின் நலனுக்காக, தனக்குத் தானே ஒரு எதிர்மறை செயலை மேற்கொள்வதினால்! அவர் தனது மகனின் மகிழ்ச்சிக்காக ஒரு எதிர்வினை மோதலை மேற்கொண்டார், அதனால் அவர் புண்ணிய கர்மாவைப் பெறுகிறார்! இல்லையெனில், எப்படிப்பட்ட கோபமும் தீய கர்மாவை மட்டுமே பிணைக்கிறது. இருப்பினும், ஒருவர் தனது குழந்தைக்கு அல்லது மாணவரின் நலனுக்காக அடையும் கோபத்தில் தன்னை எரித்துகொள்வதால், அவர் அதற்கான புண்ணிய கர்மாவை பிணைக்கிறார். இருந்தாலும் மக்கள் அவரை இழிவுபடுத்திக் கொண்டே இருப்பார்கள்! ஆனால், உண்மையான சட்டம் கடவுளிடம் இருக்கிறதா, இல்லையா? ஒருவர் தனது சொந்த மகன் அல்லது மகள் மீது கோபம் கொள்கிறார் என்றாலும், அதில் வன்முறை நோக்கம் இல்லை. ஆனால் மற்ற அனைத்து நிகழ்வுகளிலும் வன்முறை நோக்கம் உள்ளது. ஆயினும்கூட, நீடித்த பாதிப்பு அதில் உள்ளது. ஏனென்றால், தன் மகளைப் பார்க்கும் போதெல்லாம், உள்ளுக்குள் ஒரு சலசலப்பு எழுவதை உணர்கிறான்.

கோபத்தில் வன்முறை நோக்கமோ அல்லது நீடித்த பாதிப்போ இல்லாதபோது, மோட்சம் அடைய முடியும். வன்முறை எண்ணம் மட்டும் இல்லாமல் இருந்து, ஆனால் நீடித்த பாதிப்பு இருந்தது என்றாலும், ஒருவர் புண்ணிய கர்மாவைக் பிணைக்கிறார், இறைவன் எவ்வளவு நுணுக்கமான கண்டுபிடிப்பை செய்திருக்கிறார்!

## கோபமடைந்துவிட்டாலும், ஒருவர் புண்ணிய கர்மாவை பிணைக்கிறார்

"பிறருக்காகவும், பிறர் நலனுக்காகவும், ஒருவர் கோபம் கொள்ளும்போது, அதன் விளைவாக அவர் புண்ணிய கர்மாவை

அடைகிறார்” என்று பகவான் கூறியுள்ளார்.

அக்காலத்தில் *(க்ரமிக் பாதை)* ஆன்மீக முன்னேற்றத்திற்காக வழக்கமான படிப்படியான பாதையில், சீடர்கள் ‘குரு எது வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் ஏதாவது சொல்வார்’ என்கிற பயத்திலேயே இருப்பார்கள். மேலும், குருவும் அதிகாலையில் இருந்தே ஆவேசத்துடன் இருப்பார். ஆன்மீக வளர்ச்சியின் பதினான்கு நிலைகளில் பத்தாவது நிலை வரை, அவர் அப்படியே இருப்பார்! அவரது கண்கள் ‘சிவப்பாகி விடும்’ (கோபத்தினால்); ஏனென்றால் தனக்குள் எரிச்சல் இருப்பதினால்! அந்த வேதனை, எவ்வளவு வேதனையானதாக இருக்க வேண்டும் என்று எண்ணி பாருங்கள்? ஆகையால், ஒருவர் தனது இலக்கை அடைவதில் எப்படி வெற்றிபெற முடியும்? மோட்சம் அடைவது என்பது குழந்தையின் விளையாட்டா (எளிதானதா)? உண்மையில், ஒருவர் (*அக்ரம் விஞ்ஞானம்*) ஆத்ம ஞானம் அடைவதற்கான படியற்ற ஆன்மீக விஞ்ஞானம் அடைவது மிகவும் அரிது!

## கோபம் என்பது ஒரு எச்சரிக்கை

உலக மக்கள் கூறுகிறார்கள், “இந்த மனிதர் மற்றவர் மீது கோபம் கொண்டார், எனவே, அவர் தவறு செய்தவர், அதனால் அவர் பாவ கர்மாவை பிணைக்கிறார்”. இறைவன் அப்படிச் சொல்லவில்லை. இறைவன் கூறுகிறார், “அவர் தன் பிள்ளைகளிடம் கோபம் கொள்ளவில்லை, அதனால் அவருடைய தந்தை தான் குற்றவாளி. ஆகவே, அவருக்கு நூறு ரூபாய் அபராதம் விதிக்க வேண்டும். “கோபம் கொள்வது நல்லதா?” என்று மக்கள் கேட்பார்கள். இறைவன் அதற்கு கூறுவார், “இல்லை, அச்சமயத்தில் அது அவசியம். இந்த சூழ்நிலையில் கோபம்

கொள்ளாமல் இருந்திருந்தால் மகன் தவறான பாதையில் சென்றிருப்பார்” என்றார்.

எனவே, கோபம் ஒரு வகையான சிவப்பு கொடி, வேறு ஒன்றும் இல்லை. கண்ணில் கண்டிப்புடன் பார்க்காமல் இருந்திருந்தால், கோபம் வராமல் இருந்திருந்தால், மகன் தவறான பாதையில் சென்றிருப்பான். அதனால்தான் மகன் மீது தந்தை கோபப்பட்டாலும், இறைவன் அவருக்கு நூறு ரூபாய் பரிசாகக் கொடுக்கிறார்.

கோபம் ஒரு சிவப்பு கொடி; பொதுமக்களுக்கு அது தெரியாது. மேலும் அந்த சிவப்புக் கொடி எந்த அளவிற்கு காட்டப்பட வேண்டும்? எவ்வளவு நேரம் காட்டப்பட வேண்டும்? இதைப் புரிந்துகொள்வது அவசியம். ரயில் இப்பொழுது கடக்கப் போகிறது என்றால், இரண்டரை மணி நேரம் எந்தக் காரணமும் இல்லாமல் சிவப்பு கொடியுடன் ஒருவர் நின்று கொண்டிருந்தால், என்ன நடக்கும்? எனவே, சிவப்பு கொடி தேவை. இருப்பினும், அது எவ்வளவு நேரம் காட்டப்பட வேண்டும் என்பதை ஒருவர் புரிந்து கொள்ள வேண்டும்.

சாந்தமாக இருப்பது பச்சைக்கொடி போன்றது.

## ரௌத்ரத்யான் தர்மத்யானாக மாறுகிறது

நீங்கள் உங்கள் மகனுடன் கோபப்படலாம், ஆனால் உங்கள் உள்நோக்கம் என்ன?

**கேள்வி கேட்பவர்**: இப்படி நிகழக்கூடாது என்று.

**தாதாஸ்ரீ**: எனவே, இதுதான் *(ரௌத்ரத்யான்)* தன்னையும், மற்றவர்களையும் துன்பப்படுத்தும் பாதகமான உள் நிலை, இந்த

விளைவு *(தர்மத்யான்)* தான் மற்றும் பிறர் துன்பப்படுவதை தடுக்கும் நல்ல உள்நிலை. நீங்கள் கோபமடைந்தீர்கள், ஆனாலும் அதன் விளைவு *தர்மத்யான்.*

**கேள்வி கேட்பவர்**: 'இது நிகழக் கூடாது' என்ற எண்ணம் எழுந்ததால் தானா?

**தாதாஸ்ரீ**: அதன் பின்னணியில் வன்முறை நோக்கம் இல்லை. கோபம் ஒருபோதும் வன்முறை நோக்கமின்றி இருக்காது, இருப்பினும் ஒருவர் தனது குழந்தைகளுடன், தனது நண்பருடன், தனது மனைவியுடன் கோபப்படுவது போன்ற சில சூழ்நிலைகளின் போது, அவர் புண்ணிய கர்மாவை பிணைக்கிறார். ஏனென்றால், கோபப்படுவதற்குப் பின்னால் உள்ள ஒருவரின் நோக்கம் கவனத்தில் கொள்ளப்படுகிறது.

**கேள்வி கேட்பவர்**: பாராட்டத்தக்க கோபம்.

**தாதாஸ்ரீ**: மற்றொன்று போற்றத்தகாத கோபம்; இது பொருத்தமற்றதாக கருதப்படுகிறது.

எனவே, கோபத்தில் கூட இவ்வளவு வகைப்பாடு உள்ளது. இரண்டாவதாக, ஒருவர் தன் மகனை பணத்துக்காகத் திட்டினால், "நீ வியாபாரத்தை சரியாகக் கவனிக்கவில்லை" என்று பணத்துக்காகத் திட்டினால், அத்தகைய கோபம் வேறு. உங்கள் குழந்தையை மேம்படுத்த வேண்டும் என்பதற்காக குழந்தை திருடும்போதோ, வேறு ஏதாவது தவறு செய்யும்போதோ நீங்கள் குழந்தையை திட்டினால், அவனிடம் கோபப்பட்டால், அதற்கான பலன்தான் புண்ணிய கர்மா என்று பகவான் சொல்லியிருக்கிறார். பகவான் எவ்வளவு ஞானமுள்ளவர்!

## புத்திசாலிகள் இந்த வழியில் கோபப்படுவதைத் தவிர்ப்பார்கள்

**கேள்வி கேட்பவர்**: நாம் யாரிடம் கோபப்படுகிறோம்? குறிப்பாக அலுவலகத்தில் செயலாளர் மீதோ, மருத்துவமனையில் இருக்கும் செவிலியர் மீதோ கோபப்படுவதில்லை, ஆனால் வீட்டில் உள்ள மனைவியிடம் கோபப்படுகிறோம்.

**தாதாஸ்ரீ**: அதனால்தான், நூறு பேர் இங்கு உட்கார்ந்து சொற்பொழிவு கேட்கும்போது, நான் அவர்களுக்கு சொல்வது என்னவென்றால், "முதலாளி திட்டினாலோ அல்லது வேறொருவர் உங்களை திட்டினால், நீங்கள் அந்த கோபத்தை வீட்டில் உள்ள உங்கள் மனைவி மீது காட்டுகிறீர்கள்." அதனால்தான், நான் உங்களுக்கு சொல்ல வேண்டியிருக்கிறது. "ஹே, மனிதனே! ஏன் மனைவியை திட்டுகிறாய்! எந்த காரணமும் இல்லாமல் ஏன் மனைவியை திட்டுகிறாய்? உன்னை திட்டியவரிடம் ஏன் சண்டை போடவில்லை, இந்த பரிதாபமான பெண்ணுடன் ஏன் சண்டையிடுகிறாய்?"

புத்திசாலியான ஒருவர் இருந்தார். அவர் எனக்கு அறிமுகமானவர். அவர் எப்பொழுதும் என்னிடம், "ஐயா, எப்போதாவது என் வீட்டிற்கு வாருங்கள்!" என்று சொல்வார். அவர் கொத்தனார் வேலை செய்து வந்தார். ஒரு நாள் நான் அவ்வழியாகச் சென்று கொண்டிருந்தபோது அவர் என் குறுக்கே வந்து, "கொஞ்ச நேரம் என் வீட்டிற்கு வாருங்கள்" என்றார். எனவே, நான் அவரது வீட்டிற்குச் சென்றேன். அப்போது நான், அவரிடம் "ஹே! இரண்டு அறைகள் கொண்ட வீட்டில் நீங்கள் வசதியாக இருக்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர் பதிலளித்தார், "நான் ஒரு கொத்தனார், அல்லவா?"

தற்காலத்தில் மக்கள் ஒரு அறையிலேயே சமாளிக்க வேண்டும். ஆனால் அப்போதைய காலத்திலேயே அவருக்கு இரண்டு அறைகள் மட்டுமே இருந்தன! நான் அவரிடம், "ஹே, உன் மனைவி உன்னைத் துன்புறுத்துவதில்லையா?" என்று கேட்டேன். அவர் பதிலளித்தார், "என் மனைவி கோபப்படுவாள், ஆனால் நான் கோபப்பட மாட்டேன்" என்றார். நான் கேட்டேன், "அப்படி ஏன்?" என்று. அவர் சொன்னார், "அவளும் கோபித்துக்கொண்டு, நானும் கோபித்துக் கொண்டால், இந்த இரண்டு அறைக்குள், அவள் எங்கே தூங்குவாள், நான் எங்கே தூங்குவேன்? அவள் என் முதுகை பார்த்து தூங்கவேண்டும், நான் அவள் முதுகை பார்த்து தூங்கவேண்டும். அதுமட்டுமின்றி, காலையில் குடிக்க நல்ல டீ கூட கிடைக்காது. அவள் மட்டும்தான் எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறவள், என் மகிழ்ச்சி அவளால்தான்!" நான் கேட்டேன், "உங்கள் மனைவி உங்களிடம் கோபப்பட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" அதற்கு அவர் கூறினார், "நான் அவளிடம் சமாதானப்படுத்தி பேசுவேன், 'அன்பே, அதை விட்டுவிடு! நான் என்ன மன உளைச்சலில் இருக்கிறேன் என்று எனக்குத்தான் தெரியும்.' நான் அவளிடம் இப்படிச் சொல்லி சமாதானப் படுத்துவேன். அவளை நான் மகிழ்ச்சியாக வைத்திருப்பேன். வீட்டிற்கு வெளியே மற்ற மனிதர்களை அடிக்கலாம், ஆனால் நான் வீட்டில் உள்ளவர்களை அடிக்க மாட்டேன்." ஆனால் நம் மக்கள், வீட்டுக்கு வெளியில் மற்றவர்களிடம் அடி வாங்கிக்கொண்டு, வீட்டில் உள்ளவர்களை அடிப்பார்கள்.

இந்த மக்கள் நாள் முழுவதும் கோபப்படுகிறார்கள். மாடுகளும், எருமைகளும் எவ்வளவோ மேல், அவை கோபப்படுவதில்லை. வாழ்க்கையில் ஒருவித அமைதி இருக்க வேண்டும், அல்லவா? அது பலவீனம் நிறைந்ததாக இருக்க கூடாது. மாறாக, இந்த கோபம் அடிக்கடி எழுகிறது, அல்லவா! நீங்கள் இங்கே காரில் வந்தீர்கள்,

அல்லவா? இங்கு வரும் வழியில் கார் தனது கோபத்தை வெளிப்படுத்தினால் என்ன நிகழும்?

**கேள்வி கேட்பவர்**: அப்போது என்னால் இங்கு வந்திருக்கவே முடியாது.

**தாதாஸ்ரீ**: நீங்கள் கோபப்படும்போது, அவளுடைய ‘கார்’ எப்படி ஓடிக்கொண்டிருக்கும்? உங்களுக்கு கோபம் வராது, அல்லவா?

**கேள்வி கேட்பவர்**: சில நேரங்களில் உண்டாகும்.

**தாதாஸ்ரீ**: நீங்கள் இருவரும் அதை செய்தால், அதற்கு என்ன பொருள்?

**கேள்வி கேட்பவர்**: கணவன்-மனைவி இடையே கொஞ்சம் கோபம் இருக்க வேண்டும், அல்லவா?

**தாதாஸ்ரீ**: இல்லை. அப்படி எந்த சட்டமும் இல்லை. கணவன்-மனைவி இடையே அமைதி நிலவ வேண்டும். அவர்கள் ஒருவரையொருவர் துன்பப்படுத்தினால், அவர்கள் கணவன்-மனைவி இல்லை. உண்மையான நட்பில் ஒருவரையொருவர் துன்பப்படுத்துவது இல்லை. இதுதான் எல்லாவற்றிலும் மிகப் பெரிய நட்பு!! இங்கே ஒருவர் கோபப்படக்கூடாது; மக்கள் உங்கள் தலையில் அத்தகைய விஷயத்தை பொருத்திவிட்டார்கள். அவர்கள் அப்படி வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள், எனவே அவர்கள் அத்தகைய விஷயத்தை மற்றவர்களுக்கு பொருத்தி விடுகிறார்கள். “அதுதான் வழக்கம்” என்று அவர்கள் சொல்கிறார்கள். கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் துன்பப்படுத்தக் கூடாது; மற்ற எல்லா இடங்களிலும் ஏற்படலாம் ஆனால், தம்பதியினர் இடையே ஏற்படக் கூடாது.

## ஒருவரின் விருப்பப்படி மட்டுமே செய்வதன் விளைவாக ஏற்படுவது துரோகம்

**கேள்வி கேட்பவர்**: வீட்டில் இருந்தாலும் சரி, நண்பர்களுடன் இருந்தாலும் சரி, ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு கருத்துகள் இருக்கும்; அப்படியிருக்கும்போது, நம் விருப்பத்தின்படி ஏதாவது செய்யாவிட்டால், நாம் ஏன் கோபப்படுகிறோம்? அந்த நேரத்தில் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ**: ஒவ்வொரு நபரும் தனது விருப்பப்படி செய்ய முயற்சித்தால், என்ன ஆகும்? உங்களுக்கு எப்படி இப்படி ஒரு எண்ணம் வரலாம்? உடனடியாக நீங்கள் எண்ணவேண்டியது என்னவென்றால், 'ஒவ்வொருவரும் அவரவர் விருப்பப்படி செய்ய முற்பட்டால், ஒருவரோடு ஒருவர் மோதி கொண்டே இருப்பார்கள். சாப்பிடுதுவதற்கு எதுவும் இருக்காது.' எனவே நீங்கள் ஒருபோதும் உங்கள் விருப்பத்தின்படி செய்யக்கூடாது. உங்கள் விருப்பத்தின்படி செய்யவில்லை என்றால் உங்களை தவறு என்று ஒருபோதும் நிரூபிக்க முடியாது. தனக்குத் தேவை என்றுள்ளவன் தன் விருப்பப்படி செய்வான் என்கிற புரிதலை நீங்கள் தக்கவைத்துக்கொள்ள வேண்டும்.

**கேள்வி கேட்பவர்**: நாம் எவ்வளவு அமைதியாக இருந்தாலும், ஆண்கள் கோபப்பட்டால் என்ன செய்வது?

**தாதாஸ்ரீ**: அவருக்கு கோபம் வந்து, நீங்கள் சண்டையிட விரும்பினால், நீங்களும் கோபப்படுங்கள், இல்லையெனில் கோபத்தை நிறுத்திவிடுங்கள். 'படத்தை' நிறுத்த வேண்டுமென்றால், நீங்கள் அமைதியாய் இருக்க வேண்டும். நீங்கள் 'படத்தை' நிறுத்த விரும்பவில்லை என்றால், அதை இரவு முழுவதும் தொடர விட

வேண்டும், யார் உங்களை தடுக்கப்போகிறார்? உங்களுக்கு 'படம்' பிடிக்குமா?

**கேள்வி கேட்பவர்**: இல்லை, எனக்கு படம் பிடிக்காது.

**தாதாஸ்ரீ**: கோபப்பட வேண்டிய அவசியம் என்ன? அந்த நபரே கோபப்படுவதில்லை; கோபத்தை வெளிப்படுத்துவது என்பது ஒரு இயந்திரமுறையான சீர்படுத்துதல். அதனால்தான் பிறகு அவர் வருந்துகிறார்.

**கேள்வி கேட்பவர்**: கோபத்தை தணிக்க என்ன தீர்வு?

**தாதாஸ்ரீ**: ஒரு இயந்திரம் சூடாகி, அதை குளிர்விக்க விரும்பினால், சிறிது நேரம் அப்படியே அதை விட்டுவிட்டால், இயந்திரம் குளிர்ச்சியடையும். அதேசமயம் நீங்கள் அதைத் தொட்டால் அல்லது அதைத் தூண்டினால், நீங்கள் மோசமாக காயப்படுவீர்கள்.

**கேள்வி கேட்பவர்**: நானும் என் கணவரும் கோபப்படுகிறோம். ஒருவரோடொருவர் தீவிர வாக்குவாதத்தில் ஈடுபட்டு இறுதியில், ஒரு போரில் முடிவடைகிறது. எனவே நான் என்ன செய்யவேண்டும்?

**தாதாஸ்ரீ**: நீங்கள் கோபப்படுபவரா அல்லது அவர் கோபப்படுகிறாரா? யார் கோபப்படுகிறார்?

**கேள்வி கேட்பவர்**: அவர் முதலில் கோபப்படுகிறார், பின்னர் நானும் கோபப்பட்டு விடுகிறேன்.

**தாதாஸ்ரீ**: அப்படியானால், உங்களையே நீங்கள் கடிந்துகொள்ள வேண்டும் 'ஏன் இப்படி செய்கிறாய்? நீ செய்த துன்பத்தை நீ கண்டிப்பாக அனுபவிக்க வேண்டும்!' இருப்பினும், நீங்கள் *ப்ரத்திக்ரமன்* (தவறை ஒப்புக் கொள்ளுங்கள், மன்னிப்புக்

கேளுங்கள், தவறை மீண்டும் செய்யக்கூடாது என்று தீர்மானியுங்கள்) செய்தால், பிறகு எல்லா தவறுகளும் கரைந்துவிடும். இல்லையென்றால், மற்றவர்களை எப்படி நீங்கள் துன்பப்படுத்தினீர்களோ அதற்கு நீங்கள் துன்பப்பட்டே ஆக வேண்டும், ஆனால் *ப்ரத்திக்ரமன்* துன்பங்களை தளர்த்திவிடும்.

## இது ஒரு வகையான மிருகத்தனம்

**கேள்வி கேட்பவர்**: நாம் ஒருவரை கோபித்துக்கொண்டு, சபித்துக் கொண்டு இருந்தால், அதை எப்படி சரி செய்வது?

**தாதாஸ்ரீ**: உங்கள் மீது உங்களுக்கு கட்டுப்பாடு இல்லாததால், நீங்கள் கோபமடைந்து மற்றவர்களை சபிக்கிறீர்கள். கட்டுப்பாட்டிற்குள் இருப்பதற்கு, நீங்கள் முதலில் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். யாராவது உங்களிடம் கோபப்பட்டால் அதை உங்களால் ஏற்றுக்கொள்ள முடிகிறதா இல்லையா என்பதை நீங்கள் ஆராய வேண்டும். கோபப்படுவதற்கு முன், 'என் மீது யாராவது கோபப்பட்டால் அதை என்னால் ஏற்றுக்கொள்ள முடிகிறதா? நான் அதை விரும்புகிறேனா இல்லையா?' என்று ஆராய வேண்டும். நீங்கள் எப்படி நடத்தப்பட விரும்புகிறீர்களோ, அதே போல்தான் நீங்கள் மற்றவர்களிடம் நடந்து கொள்ள வேண்டும்.

எனவே, மற்றவர் உங்களை சபித்தால், அது உங்களுக்கு தொந்தரவாகவும் மனவுளைச்சலாகவும் இல்லையென்றால், நீங்கள் மற்றவர்களை திட்டலாம். இல்லையெனில், உண்மையில் நீங்கள் சபிப்பதை நிறுத்திவிட வேண்டும். நீங்கள் மக்களை ஒருபோதும் சபிக்கக்கூடாது. இது உண்மையில் ஒரு வகையான மிருகத்தனம். மேன்மை அடையாத மக்களின் கலாச்சாரம் ஒரு வகையான மிருகத்தனம்!

## *ப்ரத்திக்ரமன்* உண்மையில் மோட்சத்திற்கான சரியான பாதை

கடந்த காலத்தில், மக்கள் இரக்கம், அமைதி, சமத்துவம், மன்னிப்பு ஆகியவற்றை கடைபிடிக்க கற்றுக் கொடுக்கப்பட்டனர். ஆனால் இப்போது உள்ள மக்கள், “ஹே, நான் கோபப்பட்டுக் கொண்டே இருக்கிறேன், ஆனால் நீங்கள் என்னை மன்னிக்கும் மனநிலையை கடைபிடிக்கச் சொல்கிறீர்கள்!” நான் எப்படி மன்னிக்கும் மனநிலையை கடைப்பிடிப்பது?எனவே, உண்மையில் அவர்களுக்கு எப்படி கற்பிக்கப்பட வேண்டும் என்றால்; நீங்கள் கோபப்பட்டுவிட்டாலும், எப்படி மனம் வருந்த வேண்டும் என்றால், “எனது பலவீனத்தால் நான் கோபம் அடைந்துவிட்டேன், நான் தவறு செய்துவிட்டேன்”, என்று. இவ்வாறு வருத்தபடுவதினால், உங்களுக்கு மேலே குரு இருந்தால், அவருடைய உதவியை பெற்று, இந்த பலவீனம் மீண்டும் ஏற்படாது என்று உறுதியான உறுதிமொழியை எடுங்கள். மேலும் உங்கள் கோபத்தை தற்க்காத்துக் கொள்ளாதீற்கள். மாறாக, *ப்ரத்திக்ரமன்* செய்யுங்கள்.

எனவே ஒரு நாளில் எத்தனை முறை எண்ணம், பேச்சு அல்லது செயலின் மூலம் இன்னொரு உயிருக்கு தீங்கு விளைவித்து உள்ளீர்கள *(அத்திக்ரமன்)* மற்றும் அது யாருடன் நடந்தது என்பதைக் குறித்துக் கொள்ளுங்கள். பிறகு அதற்காக *ப்ரத்திக்ரமன்* செய்யுங்கள்.

நீங்கள் *ப்ரத்திக்ரமனில்* என்ன செய்யவேண்டும்? நீங்கள் கோபமடைந்து மற்றவர் காயப்பட்டால், மற்றவரின் ஆன்மாவை நினைவு கூர்ந்து மன்னிப்புக் கேளுங்கள். எனவே நடந்ததற்கு மன்னிப்புக் கேளுங்கள். இனி செய்யமாட்டேன் என்று சபதம் எடுங்கள், மற்றும்

*(ஆலோச்சனா)* என்றால் "நான் இந்த தவறு செய்துவிட்டேன்" என்று நீங்கள் தவறை ஒப்புக்கொள்வது.

## மனதில் மன்னிப்பு கேளுங்கள்

**கேள்வி கேட்பவர்**: தாதா, நான் வருந்தும்போது அல்லது *ப்ரத்திக்ரமன்* செய்யும்போது, பல சமயங்களில் நான் தவறு செய்துவிட்டால் அல்லது யாரிடமாவது கோபித்து கொண்டால், 'இது தவறு', என்று உள்ளுக்குள் வேதனை அடைகிறேன், ஆனால் எனக்கு மற்றவரிடம் மன்னிப்பு கேட்பதற்கு தைரியம் இல்லை.

**தாதாஸ்ரீ**: நீங்கள் அப்படி மன்னிப்பு கேட்கவே தேவையில்லை. ஏனெனில், மற்றவர் அதை தவறாகப் பயன்படுத்தக்கூடும். 'ஆமாம், இப்போதுதான் புத்தி வந்து இருக்கிறது, அல்லவா?' என்று மற்றவர் எண்ணலாம். இப்படித்தான் இருக்கிறது. பெருந்தன்மை உடையவர்கள் அல்ல. நீங்கள் நேரில் மன்னிப்புகேட்கும் அளவுக்கு இவர்கள் இல்லை. எனவே நீங்கள் மற்ற நபரின் சுத்தாத்மாவை நினைவுகூர்ந்து உங்களுக்குள் மன்னிப்பு கேட்கவேண்டும்! ஆயிரம் பேரில், பத்து பேர் மட்டுமே நீங்கள் மன்னிப்புக் கேட்பதற்கு முன்பே, நீங்கள் தலை வணங்குவதை விட, அவர்கள் அதிக பணிவானவர்களாக உங்களுக்கு தலைவணங்குவார்கள்.

## மனப்பூர்வமாக ப்ரத்திக்ரமன் செய்வதினால் உடனடி ரொக்கப்பணத்தை போன்ற பலன் கிடைக்கும்!

**கேள்வி கேட்பவர்**: நான் ஒருவருடன் ஆத்திரம் அடைந்து, அதனால் அவரை திட்டிவிட்டேன் பிறகு, நான் அமைதியாகி விடுகிறேன்; நான் பேசியதால், உள்ளுக்குள் மிகவும் வேதனை அடைகிறேன்.

அத்தகைய சூழ்நிலையில், நான் *ப்ரத்திக்ரமன்* ஒருதடவைக்கு மேல் செய்ய வேண்டுமா?

**தாதாஸ்ரீ**: இரண்டு அல்லது மூன்று முறை முழுமனதோடு துல்லியமாக செய்தால், போதுமானது. 'ஓ, தாதா பகவான்! நான் மிகவும் கோபப்பட்டுவிட்டேன். மற்றவர் அதனால் மிகவும் பாதிக்கப்பட்டுவிட்டார்! அதற்காக மன்னிப்புக் கேட்கிறேன். உங்கள் முன்னிலையில் மனப்பூர்வமாக மன்னிப்புக் கேட்கிறேன்.'

## பிழையும் உயிரற்றது

**கேள்வி கேட்பவர்**: *அத்திக்ரமன்* காரணமாக எழும் சீற்றம் *ப்ரத்திக்ரமன்* மூலம் சாந்தம் அடைகிறது.

**தாதாஸ்ரீ**: ஆம். அது சாந்தம் அடைகிறது. மிகவும் கடினமான பைல் (நபர்) என்றால் ஐயாயிரம் *ப்ரத்திக்ரமன்* செய்யப்பட வேண்டும், அப்போது தான் சாந்தமடையும். கோபம் வெளியில் வெளிப்படாவிட்டாலும், உங்களுக்குள் ஆத்திரம் ஏற்பட்டால், அதற்கு நீங்கள் *ப்ரத்திக்ரமன்* செய்யாவிட்டால், அந்த அளவு 'கறை' அழியாமல் உங்களுடன் இருக்கும். நீங்கள் *ப்ரத்திக்ரமன்* செய்தால், பின்னர் அது அழிக்கப்பட்டுவிடும். நீங்கள் *அத்திக்ரமன்* செய்திருந்தால், அதற்கு *ப்ரத்திக்ரமன்* செய்யுங்கள்.

**கேள்வி கேட்பவர்**: ஒருவரிடம் கோபித்து கொண்ட பிறகு, நான் அதை உணர்ந்து, அப்போதே அந்த நபரிடம் மன்னிப்பு கேட்டுவிட்டால், அது எப்படி கருதப்படுகிறது?

**தாதாஸ்ரீ**: இந்த ஞானத்தை அடைந்த பிறகு (அக்ரம் விக்ஞானத்தில் ஞான விதி மூலம் ஆத்ம ஞானம் மற்றும் செய்பவர் பற்றிய ஞானம் அடைவது), ஒருவேளை நீங்கள் கோபப்பட்டுவிட்ட பிறகு

மன்னிப்பு கேட்டுவிட்டால், பிரச்சனை ஏதும் இல்லை. நீங்கள் விடுபட்டுவிட்டீர்கள்! நீங்கள் நேரடியாக ஒருவரிடம் மன்னிப்பு கேட்க முடியாவிட்டால், மனதிற்குள்ளேயே மன்னிப்பு கேளுங்கள், அது போதும்.

**கேள்வி கேட்பவர்**: நேரடியாக கேட்பது என்பது, எல்லோர் முன்னிலையிலுமா?

**தாதாஸ்ரீ:** ஒருவர் இப்படி [மன்னிப்பு] கேட்காமல், மனதிற்குள்ளேயே கேட்டாலே போதும். ஏனென்றால், இந்த தவறு 'செயலற்றது', இது ஒரு வெளியேறும் தவறு. வெளியேறும் தவறு என்றால் செயலற்ற தவறு! எனவே, அது மிகப்பெரிய பாதகமான விளைவை கொடுக்காது!

## கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவை வாழ்வில் நிலைத்திருப்பது, அவைகளுக்குள் உயிர் புகுத்துவதால்

இதையெல்லாம் நீங்கள் இயக்குவது அல்ல. கோபம்-பெருமை-கபடம்-பேராசை என்ற இந்த (*கஷாய்*) துர்குணங்கள் தான் இயக்குகின்றன. உண்மையில் இந்த கஷாய்களின் ஆதிக்கம் தான்! 'நான் யார்' என்று ஒருவர் உணரும்போதுதான் கஷாய்கள் வெளியேறும். ஒருவர் கோபம் அடைந்த பிறகு வருத்தப்படுகிறார், ஆனால் அவருக்கு இறைவன் கூறியபடி *ப்ரத்திக்ரமன்* செய்ய தெரியவில்லை என்றால் என்ன பயன்? ஒருவருக்கு *ப்ரத்திக்ரமன்* எப்படி செய்வது என்று தெரிந்தால், பின்னர் அவர் விடுபட முடியும்.

எனவே, கோபம்-பெருமை-கபடம்-பேராசையின் பெருக்கம் எவ்வளவு காலம் நீடிக்கும்? 'நான்தான் சந்துபாய் [வாசகர் தன்னுடைய பெயரை இங்கே பொருத்திக் கொள்ள வேண்டும்] மற்றும் நான்

அப்படித்தான்' என்ற புரிதல் இருக்கும் வரை அவை உண்டாகும். 'நான் சந்துபாய்', என்ற உங்கள் புரிதல் பதிந்து இருக்கும் வரை, மக்களும் 'நீங்கள் தான் சந்துபாய்' என்று உங்களுக்குள் பதித்து விட்டார்கள், நீங்களும் 'நான் சந்துபாய்' என்று நம்பி விட்டீர்கள், அந்த புரிதல் இருக்கும் வரை கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவை நிலைத்திருக்கும்.

'நான் சுத்தாத்மா' என்பதை நீங்கள் உணரும் போது உங்களுக்குள் பதிந்து இருக்கும் தவறான புரிதல் கரைந்துவிடும். எனவே, ஒருவர் தன் ஆத்ம சொரூப நிலையில் நிலைபெற்ற பிறகு தவறான புரிதல் சிதைந்துவிடும், அப்போதுதான் இந்த கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவை வெளியேறும். இல்லையெனில் அவை நம்மை விட்டுப்போகாது, நீங்கள் அடித்து விரட்டினாலும் விலகாது. மாறாக, அவை அதிகரித்துக் கொண்டே இருக்கும். முதலில் உள்ளதை 'அழித்தால்' இரண்டாவது அதிகரிக்கும், இரண்டாவதை 'அழித்தால்' மூன்றாவது அதிகரிக்கும்.

## கோபம் எங்கே குறைகிறதோ அங்கே பெருமை பெருகும்

ஒரு உயர் பதவியில் இருக்கும் துறவி என்னிடம் கூறினார், "நான் கோபத்தை அடக்கிக்கொண்டே அதை வேரோடு பிடுங்கிவிட்டேன்." அதற்கு நான், "அதனால்தான் இந்த பெருமை என்ற 'காளை' பெருகிவிட்டது என்று பதிலளித்தேன்." பெருமை பெருகிக் கொண்டே இருக்கும். ஏனென்றால், அஞ்ஞானத்தின் 'மகன்கள்' அவ்வளவு எளிதில் இறந்து விடக்கூடியவர்கள் அல்ல. நீங்கள் அதற்கு தீர்வு கண்டுவிட்டால் அவை விலகிவிடும். மற்றபடி, அவை எளிதில் விலகிவிடுவதில்லை. அவர்கள் அஞ்ஞானத்தின் 'மகன்கள்'. 'கோபத்தை அடக்கிவிட்டேன், கோபத்தை அடக்கிவிட்டேன்' என்ற

[நம்பிக்கையினால்] பெருமை என்ற அந்த ‘காளை’ மிகவும் பெருத்துவிட்டது. மாறாக, அதைவிட அந்த நான்கும் (கோபம்-பெருமை-கபடம்-பேராசை) சமமாக இருந்தபோதே மேலாக இருந்தது.

## கோபமும் கபடமும் பாதுகாவலர்கள்

கோபம் மற்றும் கபடம் இரண்டும் உண்மையில் பாதுகாவலர்கள் போன்றது. அவை உண்மையில் பேராசை மற்றும் பெருமையின் பாதுகாவலர்கள். பேராசையின் உண்மையான பாதுகாவலர் கபடம் மற்றும் பெருமையின் உண்மையான பாதுகாவலர் கோபம். ஆயினும்கூட, பெருமையைப் பாதுகாக்க கபடமும் ஓரளவிற்குப் பயன்படுத்தப்படுகிறது; ஒருவர் கபடத்தைப் பயன்படுத்துகிறார், கபடத்தின் மூலம் ஒருவர் மரியாதை பெறுகிறார். மக்கள் அப்படி செய்வதில்லையா?

மேலும், அவர்கள் கோபம் கொண்டு பேராசையை கடைபிடிக்கின்றனர். ஒரு பேராசைக்காரர் ஒருபோதும் கோபப்பட மாட்டார், ஆனால் அவர் கோபமடைகிறார் என்றால், அது அவர் தனது பேராசைக்கு ஏற்றபடி நிகழவில்லை என்பதை புரிந்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால், மற்றவர்கள், பேராசைக்காரரை திட்டினாலும், அவர் “எனக்கு பணம் கிடைத்துவிட்டது! மற்றவர்கள் எத்தகைய அவச்சொல் வேண்டுமானாலும் சொல்லட்டும்” என்று பேராசைக்காரர் கூறுவார். பேராசைக்காரர் அப்படித்தான், ஏனென்றால், கபடம் பேராசைக்கு அனைத்து பாதுகாப்பையும் கொடுக்கும்! கபடம் என்றால் மாயை, [கபடம்] மற்றும் கோபம் பாதுகாவலர்கள்.

ஒருவர் தற்பெருமைக்கு இடையூறாக ஏதேனும் இருந்தால், அல்லது அவருடைய பெருமைக்கு களங்கம் ஏற்பட்டால், அப்போது

அவர் கோபம் அடைகிறார்.

கோபம் ஒரு வெளிப்படுகிற பலவீனம். ஆகையால் முதலில் கோபம் அழிக்கப்படுகிறது. கோபம் என்பது பேரழிவை உண்டாக்கும் ஆயுதம் போன்றது, எங்கெங்கு பேரழிவை உண்டாக்கும் ஆயுதம் இருக்கிறதோ, அங்கெல்லாம் ஒரு இராணுவம் போரிட தயாராக இருக்கிறது. ஒருமுறை கோபம் அழிந்துவிட்டால், பிறகு எதற்காக இராணுவம் சண்டையிட வேண்டும்? அப்போது அனைவரும் ஓடிவிடுவார்கள். யாரும் ஒட்டிக்கொண்டு இருக்க மாட்டார்கள்.

## கோபத்தின் உண்மையான வடிவம்

கோபம், [உருவானது] வெப்பமான பரமாணுவினால் (பொருளின் மிகச்சிறிய துகள்) ஆனது. கோபம், பட்டாசுகளில் வெடிமருந்து நிரப்பப்பட்டிருந்தால், அது வெடிக்கும் போது, தீப்பிடித்து எரியத் தொடங்குகிறது. வெடிமருந்து தீர்ந்துவிட்டால், பட்டாசு தானாகவே அணைந்துவிடும். உண்மையில், கோபமும் அப்படித்தான். கோபம் [உருவானது] வெப்பமான பர்மாணுவினால் ஆனது, எனவே அது அறிவியல் சூழ்நிலை ஆதாரங்களின் சட்டத்தின்படி, அது வெடிக்கும் போது, எல்லா பக்கங்களிலிருந்தும் எரிகிறது. நீங்கள் ஆத்திரம் அடைவதை *(உக்ரதா)* நான் கோபம் என்று குறிப்பிடவில்லை; கோபத்தினால் ஏற்படும் நீடித்த பாதிப்பைத்தான் கோபம் என்று குறிப்பிடப்படுகிறது. உள்ளுக்குள் ஏற்படும் எரிச்சலை தான் கோபம் என்று குறிப்பிடப்படுகிறது. தன்னுள் எரிச்சல் இருந்தது என்றால், ஒருவர் தானும் தீப்பிழம்புகளை உணர்வார், மற்றவர்களும் அதன் தாக்கத்தை உணர்வார்கள். வெளிப்படையாக தெரியும் கோபம் *(கதாபோ)* என்பதாகும். அதே சமயம் வெளிப்படையாக தெரியாத கோபம் *(அஜம்போ)* என்பது, அப்படியென்றால் ஒருவர் தனக்குள்ளேயே,

தான் மட்டும் எரிச்சலுடன் இருந்து கொண்டு இருப்பார். இருப்பினும், நீடித்த பாதிப்பு இரண்டிலும் உள்ளது. அதேசமயம் ஆத்திரம் அடைவது என்பது வேறு விஷயம்.

## மௌனமாக எரிவது, சகித்துக்கொள்வது, என்பதும் கோபம் தான்

கோபத்துடன் பேச்சை வெளிப்படுத்தாவிட்டால், மற்றவர் துன்பமடையமாட்டார்கள். ஒருவர் கோபத்தை வாய்மொழியாக வெளிப்படுத்தினால், அதை மட்டும்தான் கோபம் என்று குறிப்பிடமுடியாது. ஒருவர் தான் எரிச்சலுடன் இருந்தால் அதுவும் கோபம்தான். உண்மையில் சகித்துக்கொள்வது என்பது இரண்டு மடங்கான கோபம். சகித்துக்கொள்வது என்றால் அடக்கிக் கொண்டே இருப்பது. ஒரு நாள் அந்த சுருள்வில் எதிர்த்தாக்கினால் தான் அதை ஒருவர் உணர்வார். ஒருவர் ஏன் சகித்துக்கொள்ள வேண்டும்? ஒருவர் ஞானத்தின் மூலம் தீர்வு காண வேண்டும்.

## கோபத்தில் பயங்கர வன்முறை இருக்கிறது

புத்தி உணர்ச்சி வசப்படக்கூடியது, அதேசமயம் ஞானம் அதாவது, நிலையாக இயங்கிக் கொண்டிருக்கும் ரயில் போல், அப்படி ரயில் உணர்ச்சிவசப்பட்டால் என்ன நிகழும்?

**கேள்வி கேட்பவர்**: விபத்து ஏற்படும்.

**தாதாஸ்ரீ**: இப்படி ரயில் நிலையாக இயங்காமல் தடம்புரண்டு விட்டால், விபத்து ஏற்படும். அதேபோல், ஒரு நபர் உணர்ச்சிவசப்பட்டால், நம் உடம்பிற்குள் இருக்கும் பல உயிரினங்கள் இறந்துவிடுகின்றன. கோபம் எழும்போது, பல சிறிய

உயிரினங்கள் அழிந்துவிடுகின்றன, மேலும், “நான் அஹிம்சையை பின்பற்றுகிறேன், சிறு பூச்சிகளை கொள்ளும் வன்முறையை நான் ஒருபோதும் செய்வதில்லை” என்று ஒருவர் கூறுகிறார். ஆனால் ஹே, நீங்கள் கோபத்தினால் உணர்ச்சிவசப்படும் போது பல உயிரினங்களை அழித்து விடுகிறீர்கள்!

## கோபத்தை இப்படியும் வெல்லலாம்...

*திரவ்ய* என்றால் வெளிப்புற உலகியல் தொடர்பு. அதை மாற்ற முடியாது, ஆனால் உள்நோக்கம் மாறினால், அதுவே போதும்.

ஒருவர் கூறுவார், “நான் கோபத்தை நிறுத்த விரும்புகிறேன்.” இன்றைய தினமே கோபம் நின்றுவிடாது. ஒருவர் கோபத்தை பற்றி தெரிந்துகொள்ளவேண்டும். கோபம் என்றால் என்ன? ஏன் எழுகிறது? அது எந்த அடிப்படையில் உருவாகிறது? ஒருவர் கோபத்தை சிரமமின்றி நிறுத்த விரும்பினால், அதை எப்படி செய்வது? அதன் தாய் யார்? அதன் தந்தை யார்? அது எப்படி பிறக்கிறது? எந்த மருத்துவமனையில்? எந்த மகப்பேறு வார்டில்? இதையெல்லாம் ஆராய்ந்த பிறகுதான் கோபத்தை பற்றி தெரிந்து கொள்ள முடியும்.

## விடுபட்ட ஒருவர்தான், மற்றவரை விடுவிக்க முடியும்

அனைத்தையும் நீங்கள் அழிக்க விரும்புகிறீர்களா? எதை அழிக்க விரும்புகிறீர்கள்? ஒரு பட்டியலை உருவாக்கி என்னிடம் கொடுங்கள். நான் உங்களுக்காக அனைத்தையும் தெளிவுபடுத்துகிறேன். நீங்கள் கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவற்றால் கட்டுண்டிருக்கிறீர்களா?

**கேள்வி கேட்பவர்**: ஆம், மிகவும்.

**தாதாஸ்ரீ**: அப்படியானால் கட்டுண்டிருக்கும் ஒருவர் எப்படி தன்னை விடுவித்துக் கொள்ள முடியும்? அவன் எல்லாப் பக்கங்களிலிருந்தும் இறுக்கமாகப் பிணைக்கப்பட்டிருப்பதால், அவன் எப்படி தன்னை விடுவித்துக் கொள்ள முடியும்?

**கேள்வி கேட்பவர்**: அவர் யாரிடமாவது உதவி பெற முடியுமா?

**தாதாஸ்ரீ**: கட்டுண்டிருக்கும் ஒருவரிடம் இருந்து அவர் உதவி பெற முடியுமா?

**கேள்வி கேட்பவர்**: விடுபட்டிருக்கும் ஒருவரிடமிருந்து அவர் உதவி பெற வேண்டும்.

**தாதாஸ்ரீ**: நாம் யாரிடமாவது, “இங்கே கட்டுண்டில்லாத ஒருவர் இருக்கிறாரா? நீங்கள் கட்டுண்டிருப்பதிலிருந்து விடுபட்டவரா? எங்களுக்கு உதவுங்கள்” என்று கேட்டால், விடுபட்ட ஒருவர் அதை செய்ய முடியும், இல்லையென்றால், வேறு யாரும் அவ்வாறு செய்ய முடியாது.

## கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவையின் ஊட்டம் எது ?

சிலர் அறிந்திருக்கிறார்கள், அவர்கள் சொல்லக்கூட செய்கிறார்கள், “நான் கோபப்படுவதை, நான் விரும்பவில்லை. எனக்கு அது பிடிக்கவில்லை, எனினும் நான் அதை செய்ய வேண்டும் என்ற கட்டாயம் ஏற்படுகிறது.”

ஆனால் சிலர் கோபம் கொண்ட பிறகு கூறுவதுண்டு, “கோபப்படாமல் என்னால் எதையும் செய்து முடிக்க முடியாது, அனைத்து வேலையும் நின்றுவிடும்” என்று.

கோபம் - பெருமை - கபடம் - பேராசை ஆகியவை தன்னுடையதில் இருந்து தொடர்ந்து திருடுகின்றன, ஆனால் மக்கள் இதை புரிந்து கொள்வதில்லை. மூன்று வருடம் இந்த நான்கையும் 'பட்டினியில்' வைத்திருந்தால், அவை நம்மை விட்டு நீங்கிவிடும். இருப்பினும், அந்த உணவிலேயே அவர்கள் உயிர் வாழ்கிறார்கள்; அது என்ன உணவு? அது உங்களுக்கு தெரியவில்லை என்றால் அவர்கள் பட்டினியால் எப்படி இறந்துபோவார்கள்? அதை பற்றிய புரிதல் இல்லாததால், உண்மையில் அவைகளுக்கு உணவு கிடைத்துக் கொண்டு இருக்கிறது. அவை எவ்வாறு வாழ்கின்றன? அதுவும் அவை கணக்கற்ற காலம் வாழ்கின்றன! எனவே, அவர்களின் உணவு ஆதாரத்தை நிறுத்துங்கள். யாருக்குமே இப்படி ஒரு சிந்தனை வரவில்லை, ஆனால் எல்லோரும் அவர்களை தூக்கி எறிய போராடுகிறார்கள். அந்த நான்கும் எளிதில் விலகிவிடக் கூடியது அல்ல. உண்மையில், ஆத்மா உடலை விட்டு வெளியேறும்போது, அவை அனைத்தையும் 'நீக்கிய' பின்னர் வெளியேறுகிறது. அவைகளுக்கு வன்முறையான தண்டனை தேவையில்லை. அவைகளுக்கு உண்மையில் வன்முறையற்ற தண்டனை தான் தேவை.

ஒரு ஆன்மீக போதகர் தனது சீடரை எப்போது திட்டுவார்? அவர் கோபம் அடையும்போது. அந்தச் சமயத்தில், "ஏன் ஐயா அவரை திட்டுகிறீர்கள்?" என்று யாராவது கேட்டால் அப்போது போதகர், "அவன் திட்டுவாங்குவதற்கு தகுயானவன்" என்று கூறுவார். அவ்வளவு தான், முடிந்தது; அவர் இதை சொன்னவுடன், அதுவே கோபத்திற்கு உணவாகிறது. ஒருவர் தான் வெளிப்படுத்திய கோபத்தை நியாயப்படுத்தும்போது, அதுவே அதன் உணவு ஆகும்.

இந்த கோபம்-பெருமை-கபடம்-பேராசை இவைகளுக்கு மூன்று

வருடம் உணவளிக்காவிட்டால், உண்மையிலேயே அவை தானே நம்மை விட்டு நீங்கிவிடும், நீங்கள் எதுவும் சொல்ல தேவையில்லை. ஏனென்றால், ஒவ்வொன்றும் தனது உணவின் அடிப்படையிலேயே உயிர் வாழ்கின்றன. அதேசமயம் இந்த உலக மக்கள் என்ன செய்கிறார்கள்? கோபம்-பெருமை-கபடம்-பேராசை இவைகளை அன்றாடம் உணவளித்துக் கொண்டே இருக்கிறார்கள். மக்கள் அவைகளுக்கு தினந்தோறும் உணவளிக்கிறார்கள், அதனால் அவை அதிகரித்துவிடுகின்றன.

ஒருவர் தன் குழந்தையை அடித்தால், அவர் மிகவும் கோபமடைந்து குழந்தையை அடித்தால், அவர் மனைவி கேட்பால், "ஏன் குழந்தையை அப்படி அடித்தீர்கள்?" என்று கேட்டால். அதற்கு அவர் பதிலளிப்பார், "உன்னால் புரிந்துகொள்ள முடியாது, அவன் அடி வாங்குவதற்குரியவன்" என்று. இப்படி சொல்வதினால் கோபம் புரிந்துகொள்கிறது, 'ஓ, இவர் எனக்கு உணவு கொடுத்து விட்டார்! அவர் தனது தவறை உணரவில்லை, மாறாக, அவர் அடி வாங்க தகுதியானவர் என்று கருத்து தெரிவித்து எனக்கு உணவளித்து விட்டார்.' இதை தான் உணவளிப்பதாக கருதப்படுகிறது. நீங்கள் கோபத்தை ஊக்குவிக்கும் போது, கோபமடைவது நல்லது என்று நீங்கள் கருதும் போது, அது உணவளிப்பதாகக் கருதப்படுகிறது. கோபமடைவது தவறு என்று உங்களுக்குத் தெரிந்தால், அது உணவளிப்பதாகக் கருதப்படுவதில்லை. நீங்கள் கோபத்தை ஆதரிக்கும் போது, நீங்கள் அதை சார்ந்து இருக்கும்போது, அது அதன் உணவை பெறுகிறது. அவை உண்மையில் இந்த உணவை உண்டு தான் வாழ்கிறது. மக்கள் உண்மையில் அதைச் சார்ந்து தான் இருக்கிறார்கள், அல்லவா?

கோபம்-பெருமை-கபடம்-பேராசை ஆகியவற்றை நான் எப்போதும் ஆதரித்ததில்லை. நான் எப்போதாவது கோபப்பட்டு, யாராவது என்னிடம், “ஏன் கோபப்படுகிறாய்?” என்று கேட்டால். அப்போது நான் அவரிடம், “இந்தக் கோபம் மிகவும் தவறானது. என்னுடைய பலவீனத்தால் ஏற்பட்டுவிட்டது” என்று கூறுவேன். எனவே, நான் அதை ஆதரித்ததில்லை, ஆனால் மக்கள் அதை ஆதரிக்கிறார்கள்.

ஒரு சந்நியாசி புகை பிடித்துக் கொண்டு இருக்கும் போது, நாம் அவரிடம், “ஐயா, உங்களை போன்ற ஒரு நபர் புகையிலையை புகைக்கலாமா?” என்று கேட்டால் அப்போது அவர், “புகைப்பதில் தவறில்லை” என்று பதிலளித்ததினால் அது அதிகரிக்கிறது.

கோபம்-பெருமை-கபடம்-பேராசை, ஆகிய இந்த நான்கு பலவீனங்களில், ஒன்றைமட்டும் அதிகமாக நேசிக்கப்படுகிறது, இரண்டாவது சற்று குறைவாக, இப்படி மற்றவை... அதிகம் ஆதரிக்கப்படும் ஒன்று தான், மிகவும் நேசிக்கப்படுகிறது.

## வெளிப்படையான கர்மா, சூட்சும கர்மா

வெளிப்படையான கர்மாவை விளக்குகிறேன். நீங்கள் திடீரென்று கோபம் அடைந்துவிடுகிறீர்கள். நீங்கள் கோபப்பட விரும்பவில்லை, என்றாலும் அது ஏற்படுகிறது, அப்படி நிகழ்கிறதா, இல்லையா?

**கேள்வி கேட்பவர்**: அப்படி நிகழ்கிறது.

**தாதாஸ்ரீ**: கோபம் எழும்பினால், அதற்கான விளைவை உடனடியாக, அந்த இடத்திலேயே பெற்றுவிடுவீர்கள். மக்கள் சொல்வார்கள், “அவரை பொருட்படுத்தாதீர்கள், அவர் மிகவும்

கோபமான நபர்.” சில சமயம் யாராவது அவரை அடித்தும் விடுவார். அதாவது, அவர் மதிப்பிழந்து அல்லது வேறு வழியில் இங்கேயே விளைவைப் பெறுவார். எனவே கோபம் கொள்வது வெளிப்படையான கர்மா. கோபம் எழும்போது, ‘கண்டிப்பாக ஒருவர் கோபப்பட வேண்டும்’ என்பது உங்கள் உள்நோக்கமாக இருந்தால், அதுவே அடுத்த ஜென்மத்தில் மீண்டும் கோபப்படுவதற்கான கர்மக் கணக்கு ஏற்பட்டுவிடும். அப்படி இன்று உங்களின் உள்நோக்கம், ‘ஒருவர் கோபப்படக்கூடாது’, ‘நான் கோபமடையவே கூடாது’ என்று நீங்கள் மனப்பூர்வமாக தீர்மானித்து இருந்தும் கோபம் ஏற்பட்டுவிட்டால், அடுத்த ஜென்மத்திற்கான கர்ம பந்தம் ஏற்படாது. வெளிப்படையான கர்மாவினால் நீங்கள் கோபமடைந்தால், அதற்காக நீங்கள் இந்த ஜென்மத்தில் தண்டிக்கப்படுவீர்கள். ஆனால், அடுத்த ஜென்மத்தில் உங்களுக்கு கர்ம பந்தம் ஏற்படாது. ஏனென்றால், சூட்சுமத்தில், ‘ஒருவர் கண்டிப்பாக கோபப்படக்கூடாது’ என்ற உறுதியான உள்நோக்கம் உங்களுக்கு இருப்பதினால் தான். அதேசமயம், ஒருவர் யாரிடமும் கோபப்படாமல் இருக்கிறார், ஆனால் அவர் மனதில், ‘நாம் கோபப்பட்டால் தான் இவர்கள் ஒழுங்காக இருப்பார்கள்’ என்று எண்ணினால், அவர் அடுத்த ஜென்மத்தில் கோபக்காரராக இருப்பார்! எனவே, வெளியில் வெளிப்படும் கோபம் வெளிப்படையான கர்மா, அந்த நேரத்தில் உள்ளுக்குள் கோபம் எழும்போது இருக்கக்கூடிய உள்நோக்கம் தான் சூட்சும கர்மா, இதை ஒருவர் புரிந்து கொண்டால், வெளிப்படையான கர்மாவால் எந்த விளைவும் ஏற்படுவது இல்லை. அதனால் தான் இந்த அறிவியலை புதுமையான முறையில் வெளிப்படுத்தியுள்ளேன். இதுவரை, வெளிப்படையான கர்மாவின் மூலம் கர்ம பந்தம் ஏற்படுவதாக உலகில் பதிக்கப்பட்டுள்ளது, அதனால் தான் மக்கள் பயந்து கொண்டே இருக்கிறார்கள்.

## பேத ஞானத்தினால் தான் கோபம்-பெருமை-கபடம்-பேராசை கரைகிறது

**கேள்வி கேட்பவர்**: இந்த கோபம்-பெருமை-கபடம்-பேராசையை வெல்ல சில பூர்வாங்க ஆயத்தங்கள் அவசியமா? அது அவசியமானால், அதற்கு என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ**: கோபம்-பெருமை-கபடம்-பேராசை இந்த நான்கும் விலகினால் ஒருவர் கடவுள் ஆகிவிடுவார் என்பதுதான் உண்மை.

உங்கள் மாமாவிடம் நீங்கள் கோபப்படும் போது அவருடைய மனது உங்களிடமிருந்து விலகிவிடும், அது உண்மையில் அவரது வாழ்நாள் முழுவதும் விலகிதான் இருக்கும். எனவே, உங்கள் கோபம் தவறானது. அது மனதளவில் ஒரு இடைவெளியை உருவாக்குகிறது, இல்லையெனில் அது ஒன்று அல்லது இரண்டு வருடகால இடைவெளியை உருவாக்குகிறது. அது மனதை சிதைய செய்கிறது. இது தான் உச்சமான பயனற்ற கோபம் என்று குறிப்பிடப்படுகிறது. இதை தான் *(அனந்தானுபந்தி க்ரோத்)* கணக்கற்ற கர்ம பந்தம் மற்றும் பிறவிகள் மற்றும் ஆத்ம ஞானம் அடைவதை தடுக்கும் மிகவும் தீவிரமான கோபம் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் பேராசையும் அப்படித்தான், பிறகு பெருமை, மற்றவைகளும் அப்படித்தான், அவை மிகவும் சிக்கலானவை. அவை வெளியேறியவுடன் தான் ஒரு நபர் சீராக முடியும், பின்னர் அவர் ஆன்மீக வளர்ச்சியின் பதினான்கு நிலைகளுக்குள் வர முடியும் *(குணதானா)*. இல்லையென்றால், ஆன்மீக வளர்ச்சியின் பதினான்கு நிலைகளுக்குள் ஒருவர் வர முடியாது! இந்த *அனந்தானுபந்தி கஷாய்* (கணக்கற்ற கர்ம பந்தம் மற்றும் பிறவிகள் மற்றும் ஆத்ம ஞானம்

அடைவதை தடுக்கும் மிகவும் தீவிரமான கோபம்) விட்டுவிட்டால், அதுவே போதுமானது.

இப்போது அவற்றிலிருந்து விடுபட, ஒருவர் *(ஜின்)* ஆத்ம ஞானம் சொல்வதைக் கேட்கும்போது, அவை விலகிவிடும். *ஜின்* என்றால் ஆத்ம அனுபவம் அடைந்தவர் *(ஆத்மஞானி)* என்று பொருள். *ஆத்மஞானி* எந்த மதத்திலும் இருக்கலாம்; அவர் வேதாந்த பிரிவின் மூலமாகவோ அல்லது சமண மதத்தின் மூலமாகவோ அடைந்திருக்கலாம், ஆனால் அவர் ஒரு *ஆத்மஞானியாக* இருக்க வேண்டும். அவர் சொல்வதை கேட்டால், ஒரு சாதாரண மனிதனாக மாறுகிறான் *(ஷ்ராவக்)* பிறகு அவர் ஒரு சாதாரண மனிதராக மாறியவுடன், அவருடைய *அனந்தானுபந்தி கஷாய்* விலகிவிடும். பின்னர் கர்மாவின் அழிவு தானாகவே நடந்துகொண்டே இருக்கும்.

இப்பொது மற்றொரு தீர்வு என்னவென்றால், நான் அவருக்கு ஆத்மா மற்றும் அனாத்மாவை பிரிக்கும் ஞானம் வழங்குகிறேன். அப்போது கோபம்-பெருமை-கபடம்-பேராசை அனைத்தும் நீங்கி அழிந்துவிடுகின்றன. இந்த காலச் சுழற்சியின் இந்த யுகத்தின் அதிசயம். அதனால்தான் இது *அக்ரம் விஞ்ஞானம்* என குறிப்பிடப்படுகிறது!

**ஜெய் சச்சிதானந்தம்**

**(அழிவற்றிருக்கும் பரம்பொருளை அறிவதே பேரானந்தம்)**

# நவ கலமோ
# (ஒன்பது ஆழ்ந்த உள்நோக்கம்)
# (தினந்தோறும் மூன்று முறை சொல்லவும்)

(தாதாவிடம் தினந்தோறும் முழு மனதோடு வேண்டி கொள்ள வேண்டும். இதை ஒப்பிக்காமல், உள்ளார்ந்த, கவனத்துடன் பாவிக்க வேண்டும். எல்லாவித சாஸ்திரங்களின் சாரம் இதில் அடங்கிவிடுகிறது.)

1. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியின் தன்னல சுபாவத்தை, சிறிது அளவு கூட துக்கப்படுத்தாமல், துக்கப்படுத்த தூண்டாமல், துக்கப்படுத்துவதை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

யாதொரு ஜீவராசியின் தன்னல சுபாவத்தை சிறிது அளவு கூட, துக்கப்படுத்தாதவாறு, வெவ்வேறு கருத்துக்கள் கொண்ட அனைவராலும் ஏற்றுக் கொள்ளும்படியாக எனது பேச்சு, செயல் மற்றும் எண்ணம் செயல்பட பரம சக்தி வழங்குங்கள்.

2. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு மதத்தின் கருத்தை, சிறிது அளவு கூட துக்கப்படுத்தாமல், துக்கப்படுத்த தூண்டாமல், துக்கப்படுத்துபவரை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

யாதொரு மதத்தின் கருத்தை துக்கப்படுத்தாதவாறு, வெவ்வேறு கருத்துக்கள் கொண்ட அனைவராலும் ஏற்றுக் கொள்ளும்படியாக எனது பேச்சு, செயல் மற்றும் எண்ணம் செயல்பட பரம சக்தி வழங்குங்கள்.

3. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), உடன் வாழும் சொற்பொழிவாளர், சந்நியாசி, சந்நியாசினி, மதத்தலைவர், ஆகியோரை விமர்சிக்காமல், வெறுக்காமல், அவமதிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

4. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், சிறிது அளவு கூட

வெறுப்பும், விரோதமும், ஏற்படாமல், ஏற்படுத்த தூண்டாமல், ஏற்படுத்துபவரை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

5. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், கடுமையான, வேதனைமிக்க பேச்சு பேசாமல், பேச தூண்டாமல், பேசுபவரை ஆதரிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

எவரேனும் கடுமையான, வேதனை மிக்க பேச்சு பேசினால், நான் அவர்களிடம் பணிவாகவும், மிருதுவாகவும் பேச சக்தி வழங்குங்கள்.

6. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், பெண்கள், ஆண்கள், திருநங்கைகள் என எந்த இனத்தினரிடமும், சிறிது அளவு கூட பாலியல் சம்பந்தமான தவறுகள், மோகங்கள், சேஷ்டைகள், பாலுணர்வு சிந்தனை செய்யாமல், செய்ய தூண்டாமல், செய்பவரை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

நிரந்தரமாக புலன் இன்பங்களின்றி இருக்க, எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

7. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு சுவைக்கும் சலனப்படாமல் இருக்க சக்தி வழங்குங்கள். அறுசுவை கொண்ட உணவை சமநிலையுடன் உண்ண பரம சக்தி வழங்குங்கள்.

8. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசி, காண்பவை, கண் காணாமல் இருப்பவை, உயிருடன் இருப்பவை, மரணம் அடைந்தவை, என எவரை பற்றியும், சிறிது அளவு கூட விமர்சனம், வெறுப்பு, அவமதிப்பு செய்யாமல், செய்ய தூண்டாமல் செய்பவரை ஆதரிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

9. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), உலக நலன் பெறுவதற்கு, உறுதுணையாக செயல்பட எனக்கு சக்தி வழங்குங்கள், சக்தி வழங்குங்கள், சக்தி வழங்குங்கள்.

**-ஜெய் சச்சிதானந்தம்**

## தாதா பகவான் பௌண்டேஷன் தமிழ் யூடியூப் சேனல்




❖ இது, அதாலஜ் தாதா பகவான் பவுண்டேஷனின் அதிகாரப்பூர்வமான தமிழ் யூடியூப் சேனல் ஆகும்.

❖ கீழே உள்ள இணைப்பில் இருந்து தமிழ் மொழியில் சத்சங்க வீடியோக்களை பார்க்கவும்.

**'Dada Bhagwan Foundation Tamil' Channel:**
https://dbf.adalaj.org/yttamil

*Open Link OR*
*Scan QR*




---

*Dada Bhagwan Foundation Youtube video channels are available in other regional languages: Gujarati, Hindi, Marathi, Bengali, Tamil, Telugu, Kannada, Malayalam, Spanish, Portuguese, etc.*

# Persons to Contact

## Dada Bhagwan Foundation

**Adalaj** : **Trimandir**, Simandhar City, Ahmedabad-Kalol Highway
P/O: Adalaj, Dist.- Gandhinagar - 382421, Gujarat, India.
Tel : +91-9328661166/9328661177
E-mail : info@dadabhagwan.org

**Mumbai** : **Trimandir**, Rushivan, Kajupada, Borivali (E)
Tel : +91-9323528901

| | | | |
|---|---|---|---|
| **Kolkata:** | 9830093230 | **Delhi:** | 9810098564 |
| **Jaipur:** | 9351408285 | **Chennai:** | 7200740000 |
| **Bhopal:** | 9425024405 | **Patna:** | 7352723132 |
| **Indore:** | 9039936173 | **Amravati:** | 9422915064 |
| **Raipur:** | 9329644433 | **Bangalore:** | 9590979099 |
| **Chandigarh:** | 9780732237 | **Hyderabad:** | 9989877786 |
| **Kanpur:** | 9452525981 | **Pune:** | 9422660497 |
| **Bhubaneswar:** | 8763073111 | **Jalandhar**: | 9814063043 |
| **Varanasi:** | 9795228541 | **Sangli:** | 9423870798 |

| | |
|---|---|
| **USA: Dada Bhagwan Vignan Institute**<br>Tel: + 1-877-505-DADA(3232)<br>Email: info@us.dadabhagwan.org | **U.K: Dada Darshan (UK)**<br>Tel: +44 330-111-DADA(3232)<br>Email: info@uk.dadabhagwan.org |
| **Germany:** +49 700 32327474<br>**UAE:** +97 1557316937<br>**Kenya:** +25 4722722063<br>**Dubai:** +971 501364530 | **Australia:** +61 421127947<br>**Singapore:** +65 81129229<br>**New Zealand:** +64 210376434 |

Website : www.dadabhagwan.org



## கோபத்துடன் ஒப்பிடுகையில், சீலம் என்பதின் தாக்கம் தனிச்சிறப்பானது

கோபம், பெருமை, கபடம், பேராசை என்பதே பலவீனம். வலிமையாக இருக்கும் ஒருவர், கோபப்பட வேண்டிய அவசியம் என்ன? எனினும், ஒருவர் கோபத்தின் 'தாக்கத்தினால்', மற்றவரை கட்டுப்படுத்த முயற்சிக்கிறார். இருப்பினும், கோபம் ஏற்படாமல் இருப்பவருக்கு ஏதோ ஒன்று இருக்க வேண்டும், அல்லவா? சீலம் என்ற நடத்தை உள்ளவரிடம், விலங்குகளும் கட்டுப்பட்டு விடுகிறது. புலி, சிங்கம், அனைத்து எதிரிகள், சமூகத்தின் அனைவரும் கட்டுப்பட்டு விடுகிறார்கள்.

**தாதாஸ்ரீ**



dadabhagwan.org




Printed in India

Price ₹35